# என் அருமை மகனுக்கு
# மிடில் கிளாஸ்
# புத்தகம் 04

## மிடில் கிளாஸ்

வசதியாக வாழப் பொருள் மற்றும்  அறிவு
இருந்தும், துயரத்தை மட்டுமே துணையாகக்
கொண்டு வாழும்
ஒரு விசித்திரமான மக்கள்  கூட்டம்.

இவர்கள் பிரச்சனைகளைச் சொல்ல
பல  கதைகள். அதோடு துயரங்களைத்
துரத்த சில அறிவுரைகளுடன்.

நடராஜன் நாகரெத்தினம்

## ஆசிரியர் அலறுகிறார்
## (முன்னுரை)

உன்னுடைய அடுத்த புத்தககம் எதைப் பற்றி இருக்கும் என்று கேட்ட நண்பர் ஒருவருக்கு, மத்தியதர மக்களின் துயரங்களைப் போக்க வழி செய்யும் ஒரு புத்தகமாக இருக்கும் என்றேன்.

அப்ப, ஒரு, காமெடி புத்தகம் என்று சொல்லுங்கள் என்றார். நானும் மத்தியதர வர்க்கம் தான், என்னை விசாரித்த நண்பரும் அதே மத்யதர மனிதர்தான். பின் ஏன் மத்யதர மக்கள் பிரச்சனைகளை, நண்பர், காமெடி என்று வருணித்தார்?

நண்பர்கள், சொந்தக்காரர்கள், மாணவர்கள் என்று பல வயதைச் சார்ந்த வெவ்வேறு பின்னணிகளைக் கொண்ட மக்களை அவ்வப்பொழுது சந்தித்து, இவர்கள் சுற்றத்தில் அல்லது சூழ்நிலைகளில் உள்ள குடும்பங்களில், மிகவும் முக்கியமாகக் கருதும் பத்து பிரச்சனைகளைக் கேட்டு அறிந்த போது பெரும்பாலான கதைகள் டிராஜடி வகை என்றாலும் கேட்பவருக்கு காமெடியாக இருக்கக்கூடும் என்பது தெளிவாகியது.

இங்கே பல வகை மக்களின் பிரச்சினைகளை அலசி ஒரு முடிவு தேடும்போது, இதைப் படிக்கும் நீங்கள் இவைகள் காமெடி இல்லாமல், வேறு என்ன என்று சொல்லுவீர்கள்.

அந்த மக்களைப் பொருத்தவரை, அனுபவிக்கும் பிரச்சினைகள் கற்பனை இல்லை. அவை 100 சதவிகித அளவும் உண்மை தான். ஆனால், கேட்பவர்களுக்கு, அது ஒரு காமெடி. தவறு, யார் மீதும் இல்லை.

யார் இந்த மிடில் கிளாஸ்?

நன்றாக வாழ தேவையான பொருள், கல்வி அறிவு, அறியும் தன்மை என்று எல்லாம் இருந்தும், துயரத்தின் துணையுடன் மாத்திரமே வாழ்ந்து வரும் ஒரு வேடிக்கையான மக்கள் கூட்டம்.

இவர்களைக் காலம் காலமாகத் தொடரும் துயரங்கள் சில உண்டு.

அறிவா – அக்கப்போரா?

பலர் சொல்லி, நாம் அறிந்த சில கதைகள் அல்லது உண்மைச்

சம்பவங்களை, ஊர், பெயர் மாற்றி, மசாலா கொஞ்சம் சேர்த்து கதைகளாகச் சொல்கிறேன்.

கட்டாயமாகத் தவிர்க்க வேண்டியவற்றை எல்லாம் தேடி வெட்டி விட்டாலும், அந்தக் கதையை அதன் சுவை சிறிதும் கெடாமல் சொல்லுவோம்.

எந்தக் கதையையும் அப்படியே காதில் வாங்கி, நாலு பேரிடம் பகிர்ந்து கொண்டால் அது ஒரு அக்கப்போர்! .

அப்படிச் செய்யாமல் கதைகளில் கண்ட துயரங்களை உணர்ந்து, அதன் அடிப்படைக் காரணங்களைத் தேடிக் கண்டு பிடித்து, அதை மனதில் இருத்தி அது போன்ற சம்பவங்கள் நமது வீட்டில் நடந்து விடாமல் தவிர்க்கப் பட்டால், அதன் பெயர் அறிவு.

அந்த அறிவை வாசகர்களுக்கு வளர்ப்பதும், வளர்த்த அறிவைக் கொண்டு, இவர்களை, விடாமல் துரத்தும் துயரங்களை அணுகவிடாமல் செய்வதே இந்த புத்தகம் எழுதியதின் நோக்கம்.

எச்சரிக்கைகள்

எச்சரிக்கை–1 : நான், துயரத்துடன் பலகாலம் வாழ்ந்து விட்டேன். இனி துயரம் இல்லாத வாழ்க்கை எனக்கு ஒத்து வராது என்று நினைக்கும் பலரை எனக்குத் தெரியும். அப்படி உறுதியாக இருக்கும் மக்களை இந்த புத்தகத்தை படிக்க வேண்டாம் எண்று கேட்டுக் கொள்கிறேன்.

எச்சரிக்கை–2: இதில் பல உண்மையான சம்பவங்களை தேர்ந்தேடுத்து சம்பவம் நடந்த ஊர், பெயர் எல்லாவற்றையும் மாற்றி கொஞ்சம் மசாலா ரேத்து, கதையாகச் சொல்லியிருக்கிறேன். இவைகள் கற்பனைக் கதைகள் இல்லை, 100 சதமானம் நிஜம். ஆனாலும், இது யாரையுமே குறை கூறுவதற்கும், இழிவு செய்யும் குறிக்கோளோடு சொல்லப்படவில்லை.

எச்சரிக்கை–3 : என் புத்தகங்களுக்கு கதையை தேர்வு செய்யும்போது, நண்பர்கள் ஒரு சிலருக்கு, பேச்சுவாக்கில் சில கதைகளைச் சொல்லி, அவர்களின் அபிப்ராயத்தை அறிவதுண்டு.

அந்த சமயங்களில், இந்தக் கதை என் சொந்தக்காரார் வீட்டில்

நிகழ்ந்தது. உங்களுக்கு அது எப்படித் தெரியும் என்று சிலர் கேட்பதுண்டு. அனேகமாக ஒரே விதமான சம்பவங்கள் பல குடும்பங்களில் நிகழ்வது இயற்கைதான்.

இப்போது, உங்களுக்கும் இது தெளிவானால் தான், எனக்கு நிம்மதி.

நடராஜன். நாகரெத்தினம்

ணச்ஞச்ஞூச்டீச்ண.ணச்ஞ்ச்ஃஞ்ட்ச்டிடூ.ஞ்ணிட்

பங்களூரு

## பொருளடக்கம்

கதைகள்

## இப்படியும் சில புத்திரச் செல்வங்கள்



கிருஷ்ணனின் இந்த கதை, சுமார் 60 வருடம் முன்னால் தொடங்கியது.

அந்தக் காலத்தில் கிருஷ்ணன் போன்ற மாணவர்களுக்கு பத்தாம் வகுப்பில் படிப்பு முடிவு பெற்ற கையோடு. டைப்ரைட்டிங் ஹையர், ஷார்ட் ஹேண்ட் லோயர் இரண்டும் படித்து முடித்து சர்ட்டிபிகேட் வாங்கிடுவார்கள். சில ஸ்மார்ட் வகை ஷார்ட் ஹேண்ட் ஹையர் கூட பாஸ் செய்திருப்பார்கள். தினசரி ஹிண்டு பேப்பர் படிப்பது ஒரு கட்டாயம்.

இந்த பின்னணியிலுள்ள, பல கிருஷ்ணன், கோபாலன், பரமசிவம் ராமசாமி ஆகியோர் தில்லியிலுள்ள அத்தை, மும்பாய் சித்தப்பா, பூனே பெரியப்பா என்று சென்னை சென்ட்ரல் வரை வந்த தந்தை டாட்டா காட்ட, ஊர் கடத்தப் படுவார்கள்.

தமிழ் நாடு, இந்தியா முழுவதற்கான கிளார்க் டைப்பிஸ்டுகளை தயாரித்து ஏற்றுமதி செய்ததில் முதல் இடம் பெற்றிருந்தது.

இவர்களுடன் ரயில் ஏறுவது : ஒரு ரென் அண்டு மார்ட்டின் கிராமர் புத்தகம், ஒரு பெயிண்ட் அடித்த தகரப் பெட்டி, இரண்டு நாலு முழம் வேட்டி, சற்று பெரிய சைசில் புதிய சட்டை பேண்ட், தலா இரண்டு, ஒரு கைத்தறி பெட்ஷீட் மற்றும் தலையணை, ஒவ்வொன்று.

ஒரு ரூபாய் விலையுள்ள, ரயில் ஏறும் முன்னால் பிளாட்பாரத்தில் வாங்கிய, பிளாஸ்டிக் பர்சில் கணேசர் பெருமாள் என்று ஒரு கடவுளின் போட்டோ. அதற்குள்ளே பத்து அல்லது இருவது ரூபாய்களும், ரயில் டிக்கெட்டுடன் அடக்கம் செய்யப்பட்டிருக்கும். வெளியில் வாங்கி சாப்பிட்டால் வாந்தி பேதி வரும் என்று பீதி கிளப்பும் வகையில் ஒரு மிரட்டல் வேறு தவறாமல் வரும்.

அதோடு பசிக்கு கட்டு சோறு பொட்டலம் மூன்று நான்கு, இடம் பெறும். இந்த இளைஞர்களை வரவேற்று வேலை வாங்கித் தரப்போகும் சித்தப்பா, அல்லது மாமாவுக்கு ஒரு விவரமான கடிதம். இவ்வளவு தான்.

தட்டுத்தடுமாறி, கிளார்க், டைப்பிஸ்ட், ஸ்டெனோ என்று சிறிய வேலையில் சேர்ந்து, மேலும் மேலும் உயர்ந்த பதவிகளை எட்டிப் பிடித்த பசங்கள் ஏராளம். நமது கிருஷ்ணனை போல சிலரும் உண்டு. இதில் கிருஷ்ணன் எப்படி வித்யாசமானவன் என்கிறீர்களா?

கிருஷ்ணனுக்கு ஒரு தாத்தா. அந்த தாத்தா சொன்னார், காலணா (இன்றய ஒண்ணரை பைசாவுக்கு சமமான காசு) காசானாலும், கவர்ண்மெண்ட் காசுதான் உயர்ந்தது. கவர்மெண்டு வேலையைப் பிடி. பிடித்தபின் விடாதே என்று அறிவுருத்தினார்.

அந்த தாத்தா சொல்லைத் தட்டாததால், வலுவில் வந்த, நல்ல வருமானம் தரும் தனியார் துறை வேலைகளை தட்டிவிட்டு கவர்ண்ட்மெண்ட் வேலை ஒன்றை கெட்டியாக, நமது கதாநாயகக் கிருஷ்ணன், பிடித்துக்கொண்டார்.

கிருஷ்ணனின் உற்றார், உறவினர் என்ற இருவரும் காலத்தோடு கூட்டு சேர்ந்து, சதி செய்தார்கள். நன்றாக, சந்தோஷமாக இருந்த கிருஷ்ணனைத் திருமணத்தில் கொண்டு சேர்த்தார்கள்.

இவர் புத்திசாலித்தனமாக, நாம் இரண்டு, நமக்கும் இரண்டே இரண்டு என்ற வகையில், இரண்டும கன்களுக்கு மேல் குடும்பம்

பெருகாமல் பார்த்துக் கொண்டார். எல்லாத் தந்தைகளையும் போலவே, தன் சக்திக்கும் மீறிய பள்ளிகளுக்கு பிள்ளைகளை அனுப்பினார்.

தான், உயர் கல்விபெற்று நல்ல வருமானம் தரும் வேலையில் இல்லாமல் போனதால் உண்டான சிரமம், பிள்ளைகளுக்கு வரக்கூடாது பாருங்கள்!. நல்ல சிந்தனை தானே !

நமது பிள்ளைகளாவது நம்மை விட வளமாக, வசதியாக, நன்றாக இருக்க வேண்டும் என்று எந்த பெற்றோர்தான் விரும்பமாட்டார்கள்? இல்லையா? இந்த சிந்தனை தொடங்கியது எத்தனை தலைமுறைகள் முன்னால் என்று யாராலும் கணக்கிட்டுச் சொல்ல முடியாது.

கிருஷ்ணனுக்கு, ஓய்வு பெறும் வயதாகவில்லை. உடல் ஆரோக்கியமும் குறைவில்லை. இன்னமும் சுமார் 7 வருடம் வண்டி ஓடும். இரண்டு பிள்ளைகளையும் எம் எஸ் சி வரை படித்து வை த்தாகி விட்டது. இனி முதல் முறையாக நினைவு தெரிந்த நாளாக கடன் அதிகமில்லாத ஒரு வாழ்கையை அனுபவிக்க ஒரு சான்ஸ். இந்த எண்ணம் எழுந்ததும் கிருஷ்ணனின் மனம் மகிழ்ச்சியால் நிரம்பியது.

முதல் பையன் கோவிந்தன் படித்து முடிதது ஒரு வருடம் ஓடிவிட் டது. இன்னமும் ஒரு நல்ல வேலை கிடைத்த பாடில்லை. இண்டர்வியூ, அப்பிளிகேஷன் என்று சிறிய செலவுகள் தொடர்ந்தன.

கோவிந்தன், ஒரு நாள், தந்தையை நல்ல மூடில் பிடித்தான். நான் ஜி ஆர் ஈ, டொபெல் போன்ற பரிட்சைகளைக் கல்லுரியில் படிக்கும் காலத்திலேயே முடித்து விட்டேன் என்றான்.

தந்தையோ இந்த படிப்பைபற்றி கேள்விப்பட்டதில்லை. மிக்க மகிழ்ச்சி என்றார். இந்த பரிட்சை பாஸானதால் அமெரிக்காவில் உள்ள பல்கலைக் கழகங்களில் படிக்க இடம் கிடைக்கும் என்றான் கோவிந்தன்.

தந்தை விழித்தார். இதை எதற்கு என்னிடம் சொல்கிறான்? ‘அடுத்தாற்போல் என்ன‘ என்ற கேள்வி, அவர் கண்களில் தெரிந்தது.

அதற்கு சுமார் மூன்று லக்ஷம் வரை பணம் தேவை என்றான், மகன். இதை கேட்ட கிருஷ்ணன், தன் கண்கள் கபாலத்திலிருந்து கழன்று வெளியேறி, தனியாகத் தொங்குதாக உணர்ந்தார், சிந்தித்தார். அவர் அவ்வளவு பெரிய தொகைக்கு எங்கே போவார்?

பையனே, வழியும் சொன்னான். வீ ஆர் எஸ் என்ற ஒரு திட்டம் அரசாங்க ஊழியர்களுக்கு உண்டு. ரிடைர்மெண்ட் வயது வரை காத்திருக்காமல், தானாகவே, வேலையில் இருந்து ஓய்வு பெறுவது தான் திட்டம். அப்போது, அறுபது ஐந்து வயது வரை கிடைக்க வேண்டிய பெண்ஷன் தொகையில் மூன்றில் ஒரு பாகம், மொத்தமாக பெறலாம். அந்த வயது எட்டும்வரை ஓய்வு ஊதியம் ஒன்றும் கிடைக்காது.

‘ஒரு பதினெட்டு மாதம் பல்லைக்கடித்துப் பொறுத்துக் காத்திருந்தால் போதும். பிறகு டாலர் மழைதான்.‘ என்று சொன்ன மகனின் கண்களில் ஒளி நிறைந்திருந்தது.

யோசித்துப் பார்த்தார். உதவிக்கு இரண்டாவது மகன் இருக்கிறான். தைரியமாக காரியத்தில் இறங்கினார். மூன்றாவது மாதம் பூனாவிலிருந்து ரிடயர்மெண்ட் தொகை கிடைத்து. சிங்காரச் சென்னைக்குள் குடி புகுந்தார். மகன் அமெரிக்கா சென்று, பல்கலைகழகத்தில் சேர்ந்தாகி விட்டது.

இரண்டாவது மகன், கோபிக்கு, விற்பனை அதிகாரியாக, சிறிய ஒரு தனியார் துறையில் வேலை கிடைத்தது. சம்பளம் அதிகமில்லை. ஆனாலும் உழைத்தால் உயரலாம் என்ற நம்பிக்கை உண்டு. அவ்வளவுதான்.

தந்தை, முதல் மாதம், மாதாந்திரச் செலவுக்காக இரண்டாம் மகன் கோபியிடம், ஒரே ஒரு முறை, கையேந்தி நின்றார். தனக்கு வரும் வருமானம், தனக்கே போதவில்லை என்ற கோபி, பாசம் ஒருவருக்கு, பாரம் மற்றவருக்கா என்றான்.

தந்தை புரிந்து கொண்டார். முதல் மகன் அமேரிககா போக தன் மொத்த பெண்ஷன் பணத்தையும் கொடுத்ததால், இரண்டாவது மகனுக்கு வருத்தம்.

விளைவு? கிருஷ்னன், மனவியுடன், வாழ்க்கையில் முதன் முறையாக, சுகாதாரமற்ற சுற்றுப்புரம் கொண்ட ஒரு குடிசைப்

பகுதியில் குடியேறினார், மலேரியாவில் ஆரம்பித்த வியாதிப் பட்டியல் பெரியதானது. சுருங்கவே இல்லை.

வேலை ஒன்றைத் தேடினார். இவர் பார்த்த கவர்மெண்ட் கிளார்க் உத்யோகத்திற்கு உலகத்தில் வேறு என்ன வேலை கிடைக்கும்? ஒரு பரபப்பான மளிகைகடை ஒன்றில் கணக்கு எழுதும் வேலை.

கிடைத்த வருமானம் குடிசை வாடகை போக இரண்டு வேளை சோத்துக்கே பற்றாது. மருந்து செலவுக்கு ஏது வழி? இப்படி ஒரு எதிர் காலத்தை அவர் கனவிலும் கூடக் காணவில்லை. தான் யாருக்கும் எந்த கெடுதலும் செய்ய வில்லையே? நமக்கு ஏன் இந்த கதி? அலரிப்பார்த்தால். ஆத்திகர்கள் கிரக்கோளாறு என்றார்கள். வேறு சிலரோ ஊழ்வினையாக இருக்குமோ என்றார்கள். பிராரார்த்த கர்மாவாக அல்லது சஞ்திதார்த்த கர்மாவாக இருக்குமோ என்றார்கள் வேறு சிலர். இதை யோசித்துக் கொண்டே பதினெட்டு மாதங்களைக் கடத்தியாகி விட்டது. டாலர்கள் மாத்திரம் வந்தபாடில்லை.

இப்போது பெரியவருக்கு, கடித்துக் கொள்ளக்கூட அதிகம் பற்கள் மிஞ்சவில்லை. பல பற்கள் ஒன்று ஒன்றாய் விழுந்து விட்டன.

மகனைத் தொடர்ந்து அமேரிக்கா போன அவன் கல்லூரி நண்பன் விடுமுறைக்கு வந்திருந்தான். அவன் தெரிவித்த தகவல் இது தான். கிருஷ்ணனின் மகன் படிக்கும் பொழுதே ஒரு பெண்ணைக் காதல் திருமணம் செய்து கொண்டான் என்றும். அதனால் அவனுகே தன் வருமானம் போதவில்லை என்று அவ்வப் போது சொல்லிக் கொள்வதாகவும் ஒரு தகவலைத் தெரிவித்தான்.

நல்லவேளை. பெரியவருக்கு, அதன் மேலும் பற்களை கடித்துக் கொள்ள அவசியம் இல்லாமல் போய்விட்டது.

இன்றோடு, பத்து வருடங்கள் ஒடிவிட்டன. மொத்தமும் ஒய்ந்து போனார் பெரியவர், யாராவது தன் குழந்தைகள் சகிதமாக தான் வேலை பார்க்கும் மளிகைக் கடைக்கு வந்தால், குழந்தைகளையும் பெற்றோரையும், சிறிது நேரம், மாறி மாறிப் பார்ப்பார். அப்பொழுது, அவர் மனதை, இந்த குழந்தைகள் தன் பெற்றோரை குடிசையில் எப்போது தள்ளிடுவார்களோ என்ற எண்ணம் நிரம்பி நிற்குமோ?

பெரியவருடைய கடைக்கு மாதம் தவறாமல் வருகை தரும் சோமுவுக்கு பெரியவரின் துயரமான கதை, மற்றவர்கள் மூலமாக கேள்விப் பட்டிருக்கிறார். ஒரு முறை பெரியவருக்கு பண உதவி செய்ய முன் வந்தார். பெரியவர் கண்கள் கலங்க, கைகளை கூப்பி, வலிய வந்த உதவியை, மறுத்து விட்டார். எனது நிலை எந்த பெற்றோருக்கும் வரக்கூடாது என்று மாத்திரம் கூறினார்.

உங்களுக்கு வேண்டிய எதிர்கால தேவையை பத்திரமாக வைத்து கொண்டு புத்திர செல்வங்களை படிக்க வையுங்கள் என்று புத்திமதி ஒன்றை உதிர்த்து விட்டு வழியும் கண்ணீரை மேல் துண்டால் துடைத்துக்கொண்டு தன் மேசைக்கு நகர்ந்தார்.

அலசவேண்டியது!

கிருஷ்ணன் பிரச்சனைதான் என்ன?

இவருக்கு இந்தப் பிரச்சனையிலிந்து விடிவு உண்டா?.

இந்தப் பிரச்சனை மற்றவர்ளுக்கு வராமல் தடுப்பது எப்படி?

கிருஷ்ணனின் பிரச்சிணைக்குத் தீர்வு

நமது கூட்டுக் குடும்ப கலாசாரத்தில் இது ஒரு சராசரி எல்லா குடும்பங்களிலும் எல்லாக் காலங்களிலும் பல உருவங்களிலும் இந்த பிரச்சினை. வரும்.

அமேரிக்கா போன்ற தனி மனித சமுதாயத்தில் இந்த விதமான பிரச்சினைகள் இல்லை.

பெற்றோர்களை மூன்று தரமாகப் பிரிக்கலாம்.

(1) உத்தம (உயர்ந்த தரம்), (2) மத்யம (இடைத் தரம்), (3) அதம (கடைசித் தரம்);

உயர்ந்த வகை அல்லது உத்தம பெற்றோர் – தான் எந்த சுகங்களை இழக்க வேண்டி வந்தாலும், எந்த துக்கங்களை அனுபவிக்க வேண்டி வந்தாலும் தன் பிள்ளை – குட்டிகள் (சந்ததிகள்) நலமாக வாழ்வதைக் கண்டு மகிழும் வகையை சேர்ந்தவர்கள். இவர்கள், தங்கள் குழந்தைகளில் நலத்தில் மற்றும் மகிழ்ச்சியில் தனது தேவைகளையும் மற்றும்

துக்கங்களையும் மொத்தமாகக் கரைத்து விடுவார்கள்.

இடைத் தரப் பெற்றோர்: தான் உழைத்துச் சேர்த்து, கடன் பட்டு, தன் சந்ததிகளின் நல்ல வாழ்க்கை அடைவதற்கும் பாடுபடுவார்கள். அதை, பிள்ளைகள் அடைந்தவுடன், தாங்களும் அந்த வெற்றிகளில் பங்கெடுத்து, பலன்களை அனுபவிப்பதைத் தவறாக எண்ணாதவர்கள்.

கடைசி ரகம்: பிள்ளை குட்டிகளுக்கு என்னவானாலும் கவைப்படாமல், அவர்கள் மூலம் தான் அதிக அளவில் சுகப்பட நினைக்கும் ஒரு கூட்டம். பிள்ளை குட்டிகளின் வாழ்க்கையைப் பலியாக்கி அல்லது விலை பேசி, அதன் மூலம் தனக்கு வச தியான வாழ்கையைத் தேடும் பெற்றோருக்கும் இந்தக் கூட் டத்தில் குறைவில்லை! இவர்கள், கடைசி ரக பெற்றோர் என்று அழைப்பதில் தவறில்லை.

மகனுக்குத் திருமண்மான பிறகு மருமகளுடன் வரதட்சினைடுக் கொடுமை செய்யும் பெற்றோர் இந்த ரகன் என்று சொல்லாமலேயே வாசகருக்கு புரியும் இல்லையா? இந்த வகைப் பெற்றோர் தங்கள் மகனுக்கு பெண் தேடுமெபோது, இயன்றவரை, ஏழ்மையிலுள்ள அழகில் குறைவாக உள்ள பெண்ணைத் தேர்ந்தெடுப்பது உறுதி. மகன் பெண்ணின் அழகில் மயங்கி, மனைவியின் பொருளாதாரத்தில் பயந்து தங்களை கழட்டிவிடுவானோ என்ற பயம் அல்லது சந்தேகம் ஒரு காரணம். ஆகமொத்தம், இது ஒரு பொருளாதார பிரச்சனை.

இந்த மூன்று பிரிவுகளுக்குப் பின்னால் ஏதோ ஒரு அடிப்படை வேண்டும் இல்லையா? அவசியம் உண்டு.

நமது கதாநாயகர், கிருஷ்ணன், மேலே குறிப்பிட்ட மூன்று தரத்தில், இடைப்பட்டவராக, நாம் நினைக்க வழி இல்லை.

தனது சக்தியை மீறிய கல்வியை சந்ததிக்கு தந்துவிட்டோம். இனி கடனில்லாத வாழ்க்கை வாழலாம் என்று நினைத்தாரே தவிர, அந்தக் கல்வியினால் மகன்கள் பெறவிருக்கும் நல்வாழ்வில் பங்கு தேடவில்லை. ஆகவே, முதல் தரத் தந்தையாக நினைத்துக் கொள்ளலாம்.

இவர் முதல் வகை தந்தையாக இருந்திருந்தால், மகனின்

வெற்றிகளில் தனது வலிகள், துயரங்கள் எல்லாமே கரைத்திருப்பார்.

மூன்றாவது வகை தந்தையானால், தனக்கு பொருளாதார பாதுகாப்பு செய்து கொண்டிருப்பார். பிள்ளை படிப்பிற்காக தன் வருங்காலத்தை கோட்டைவிட்டு, இந்த வறுமைக்கு என்றுமே தள்ளப் பட்டிருக்கமாட்டார்.

கிருஷ்ணன், தான் சுகமாக வாழத் துடிக்காவிட்டலும் எதிர்பாராமல் படு ஏழ்மையில் தள்ளப்பட்டதால் அதிர்ச்சிக்கு உள்ளானார் எனலாம்.

அடுத்ததாக பிள்ளைகள் பெற்றொரை இப்படிப்பட்ட நல்ல ஒரு தந்தையைத் தவிக்கவிட காரணம் என்னவாயிருக்கும்?

இந்த கதாநாயகர், நாம் கதை மூலம் அறிந்தவரை அவரது பெற்றோரையும், சுற்றத்தாரையும் எந்த ஒரு கால கட்டத்திலும் பொருளாதார அடிப்படையிலோ அல்லது வேறு என்த விதத்திலும் கவனித்துக் கொண்டதாகவோ கதையில் காணப்பட வில்லை. தான், தன் குடும்பம் என்று சுயனலத்தில் மட்டுமே தான் வாழ்ந்து காட்டியதைத் தனையன் பின்பற்றுகிறானோ?

பல பிள்ளைகள் முதிய வயதினரான தங்கள் குடும்ப நபர்களைக் கண்டு கொள்வதில்லை. அப்படி, தான் தனது குடும்பம் என்று சுய நலத்தோடு வாழும் குடும்பத்தில் பிறந்த பிள்ளைகளுக்கு மட்டும் வயதான காலத்தில் தங்கள் பெற்றோரையும் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணம் எங்கிருந்து உதிக்கும்?

முதல் தீர்வு:

மனதளவில் ஒரு முதல் வகை (உத்தம) தந்தை என்ற இடத்தை அடையுங்கள். உங்கள் பெற்றோருடைய தியாகங்கள், உங்கள் வாழ்க்கையை, (பெற்றோரின் வாழ்வைவிட) வளமாக இருப்பதற்கு ஒரு முக்கிய காரணம்.

இரண்டாவது தீர்வு:

நீங்கள் தராத ஒன்றை, மற்றவரிடம் (உங்கள் புத்திர செல்வங்கள் உள்பட) எதிர் பார்ப்பதது ஏமாற்றத்தைத் தரும்.

மூன்றாவதாக – ஒரு முற்போக்கான ஒரு சிந்தனை.

இந்த விதமான சிந்தனை, மிகவும் சில மக்களை மட்டுமே, குறிப்பாக, பாசிடிவ் சிந்தனை உள்ளவர்களை மட்டுமே தன் வசம் இழுக்கும்.

நமது வாழும் காலத்தில், பல முறை நம் செல்வாக்கு, செல்வம், அறிவு, அத்தனையும் மீறி ஒரு மீளக் கடினமான, சிக்கலான பல சூழ்நிலைகளில் தள்ளப்படுவோம்.

அப்படி ஒரு எதிர்பாராமல் தள்ளப்பட்ட தனது புதிய சூழ்நிலையில், தனது சுய பச்சாதாபத்தை ஓரமாகத் தள்ளி வைத்து விட்டு, காலம் காலமாக பரம்பரையாகக் குடிசைகளிலேயே வாழும் மக்களுடன் ஒன்றி, அந்த எளிவர்களின் மேம்பாட்டிற்கு உழைக்கலாம்.

இதன் மூலம் வாழ்வின் நிலையற்ற தன்மையை உணர ஒரு நல்ல வாய்ப்பு கிடைக்கும். நம்மிலும் மோசமான சமூகம் மற்றும் பொருளாத நிலலையில் உள்ளவருக்கு உதவிட ஒரு அரிய வாய்ப்பு. இந்த ஈடுபாடு, ஆன்மிக சிந்தனைகளைத் தூண்டி, நம்மை ஆன்மிகப் பயணத்திகு மேற்கொள்ள தயார் செய்யும்.

எந்த ஒரு பாதகமான சூழ்னிலையும் மனிதன் பொருள் உலகிலும் முன்னேற்றம் அடையும் ஒரு வாய்ப்பைத் தருகிறது.

வெற்றியுடன் வாழ்பவர்கள் இதை அறிவார்கள்

# இப்படியும் ஒரு புத்திரச் செல்வம்
## கதை 2.
## ஏர்ப்போர்ட்டில் அம்மா.



காமாட்சி அம்மாளின் கதையைப் போலவே பல செய்திகள் வெளிவருகின்றன. ஒரே நிகழ்ச்சிதான் பல மனிதர்கள் காதில் புகுந்து அவர்கள் கற்பனையால் புதிய உயிர் பெற்று வெளியேறி வாழ்கின்றனவா. இல்லை உண்மையாகவே, பல நிகழ்ச்சிகளா?

காமாட்சி அம்மாளின் கணவன் இறந்து பல வருடங்கள் பறந்து விட்டன. அவர்களுக்கு ஒரே பிள்ளை. நன்றாகவே படித்தான். அவன் விருப்பபடி எஞ்சினியரிங் படிக்க வைத்தாகிவிட்டது. அமேரிக்கா போய் அங்கே படிக்க ஆசைப்பட்டான். எங்கேயாவது மகன் வளமாக மனம் போல வாழ்ந்தால் தாய்க்குச் சந்தோஷம் தானே. நிலத்தில் பெரும் பகுதியை விற்று, மகனின் ஆசையை நிறைவேற்றினாள், இந்தத் தாய்.

தனது மிகுந்த நாட்களை, கிராமமும் இல்லாத பட்டினமும் இல்லாத, அந்த ஊரிலேயே கழித்துவிட காமாட்சி அம்மாள் முடிவு செய்துவிட்டாள். கணவன் விட்டு சென்றதில் மகன் படிப்புக்கான செலலவுக்குப் போக பாக்கி இருக்கிறது. இருக்க பெரிய வீடும், சாப்பாட்டிற்கு தேவையான வருமானம் தரும் அளவு நிலமும்

இருக்கிறது. காமாட்சியம்மாளுக்கு வேறு எதுவுமே வேண்டாம்.

கணவன் இறந்த பின், தன் காலில் நின்று மகனை வளர்த்து ஆளாக்கி இருக்கிறாள். மகனிடமோ அல்லது மற்ற எந்த ஒரு மனிதரிடமும் காமாட்சி அம்மாள் எதிர்பார்ப்பது என்று ஒன்று கிடையாது.

அந்த ஊரைச் சேர்ந்த பசங்கள் யாருமே இங்கே கிடையாது. பாம்பே பங்களூர், ஹைதராபாத் சென்னை என்று வெளியூரில் பத்து பேர் இருந்தால் அமேரிக்கா போன்ற வெளிநாட்டில் பத்துபேர் வேலை பார்ப்பதாக பக்கத்து வீடுகளில் பேசிக்கொள்வார்கள்.

பலர் தான் மகன் மகள் இருக்கும் வெளிநாடுகளுக்கு போய் ஓரிரண்டு மாதங்கள் தங்கி வந்திருக்கிறார்கள். அந்த தாய்மார்கள், பாண்ட், சட்டை, ஸ்போர்ட் ஷூ சகிதமாக தன் மகன், அல்லது மகள், பேரப் பிள்ளைகள் ஆகியவர்களுடன் எடுத்த போட்டோக்களை ரகசியமாக சில நண்பிகளிட.ம் பகிர்ந்து கொள்வார்கள். உள்ளூர மகிழ்ச்சி, வெளியே மட்டும் வெட்கம். அவ்வளாவுதான். ஆனால், சாப்பாடு, குளிர் இவைதான் தாங்க முடியாது என்பார்கள்.

அமெரிக்கா போய் வந்த மற்ற அம்மாக்கள் சிலர், காமாட்சி நீயும் ஒரு நடை அமெரிக்கா போய் மகனோடு இருந்துவிட்டு வாயேன் என்பார்கள்.

இருக்கும் இடம் தான் சுவர்க்கம் என்று பதில் சொல்லுவாள் காமாட்சி. அப்படி ஆசையே இல்லாத ஜன்மம்.

ஊரில் இப்போதெல்லாம் காமாட்சியைப் பற்றிதான் பேச்சு.

காமாட்சியின் பக்கத்து வீட்டில் போன் வசதி உண்டு. எப்போதாவது ஒரு தடவை அமெரிக்கா மகன் போன் செய்து நலம் விசாரிப்பான். இப்போது என்னவோ தொடர்ந்து பல நாட்கள் பேசி, காமாட்சி அம்மாளை அமெரிக்கா வர சம்மதிக்க வைத்துவிட்டான்.

அதிசயம் அது இல்லை.சொத்து பத்து எல்லாவற்றையும் விற்று விட்டு அமெரிக்காவில் செட்டிலாக முடிவு. காமாட்சிக்கு இதில் உடன்பாடில்லை. தனக்கே தான் எப்படி சம்மதித்தோம் என்று புரியவில்லை. ஒரு மாத லீவில் மகன் மருமகளோடு வருகிறான்.

வீடு வாசல் எல்லாமே விற்கணும் இல்லையா?

இன்று காமாட்சி அம்மாளுக்கு, இந்த ஊரில் கடைசி நாள். காமாட்சி அம்மாள் தன் வாழ்வில் அனேகமாக முழுவதையும் செலவழித்த இடத்தில் இருக்கப் போவது இன்னமும் சில நிமிடங்களே தான்.

துணிமணிப் பெட்டிகள் வாடகைக் காரில் ஏறிவிட்டது. கண்ணீர் வழிய, காமாட்சி அம்மாளுக்கு தெரிந்தவர்லளும், நல்ல சில சொந்த பந்தங்களும் வழியனுப்ப, கார் சென்னையை நோக்கி விரைந்தது.

ஒரு நாள் முழுவதும் பாங்க் வேலை ஷாப்பிங் என்று மகனும் மருமகளும் சென்னையில் அலைந்தார்கள். அடுத்த நாள் இரவு மூவரும் விமான நிலையத்திற்குச் சென்றார்கள்.

காமாட்சி அம்மாளுக்கு மணி எட்டானால் சாப்பிட்டுவிட்டுத் தூங்கி விடும் பழக்கம். நடு ராத்திரிப் பயணமாம்.

மணி பத்து. காமாட்சி அம்மாளுக்கு தூக்கம் தாங்கவில்லை. மகனும் மருமகளும் போவதும் வருவதும், செல்போனில் பேசு வதுமாக இருந்தார்கள்.

இப்போது, பொழுது விடிந்தது. கண் விழித்தபோது, அந்த பயணிகளுக்கான தங்கும் இடத்தில். ஒரு போலீஸ்காரர் மற்றும் ஒரு அதிகாரியும் அவள் முன்னே நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள்தான் தன் தூக்கத்தைக் கலைத்திருக்கவேண்டும்.

எங்கேம்மா போகணும்? கூட வந்தவந்தவங்க எங்கே? காமாட்சி முழித்தாள். மகனும் மருமகளும் எங்கே? கண்கள் தேடின. மெதுவாக, பையன் மருமகள் பெயர்களை சொன்னாள். தானும் அவர்களுடன் அமெரிக்கா செல்ல பயணப்பட்டதாக தெரிவித்தாள்,

நடுநிசியில்தான் அவர்கள் பிரயாணம் என்று மகன் கூறியதை அவர்களிடம் சொன்னாள்.

போலீஸ்காரரும் உடனிருந்த அதிகாரியும் ஏதோ பேசிக் கொண்டார்கள். காமாட்சி அம்மாவுக்கு காபியும் இட்டிலியும் (கொள்ளை விலை) வாங்கிக் கொடுத்தார்கள். (மகராஜன் நல்லா இருக்கணும் என்று மனதார ஆசிர்வாதம் செய்தாள்).

போனில் யாரிடனோ வெகு நேரம் பேசினார்கள். கடைசியாக, மகனும் மருமகளும் முந்தைய இரவே அமெரிக்கா சென்று விட் டதாகவும், காமாட்சி அம்மாளுக்கு டிக்கட் கூட வாஙகவில்லை என்பதையும் தெரிவித்தார்கள்.

அந்த நல்ல மனதுள்ள அதிகாரிகள், காமாட்சி அம்மாளை ஒரு நல்ல அனாதைகள் இல்லத்தில் சேர்த்துவிட்டதாக அறிகிறோம்.

காமாட்சி அம்மாளுக்கு இந்த நிலமை வந்த்து ஏன்?

ஏதோ, பிறருக்கு எந்த தொல்லையும் தராமல், தான் உண்டு தன் வாழ்க்கை உண்டு என்று தன் காலில் நின்று வாழ்ந்து கொண்டிருந்த காமாட்சி அம்மாளை, அவர் மகன், உள்ளதையும் பறித்துக்கொண்டு நடுத்தெருவில் நிற்க வைத்தது ஏன்?

எந்த கெடுதலும் நினைக்காமலும், நன்மையே செய்து வந்த தாயைத் தவிக்க விட மகனுக்கு எப்படி மனம் வந்தது?

விமரிசனம்

இப்போது காமாட்சி அம்மாளின் வாழ்க்கையை அலசுவோம்.

(1) இவர் ஒரு உன்னதமான தாய். சுயநலம் ஏதுமில்லை.

(2) மகனின் நலன், விருப்பங்களை தடையில்லாமல் நிறை வேற்றியிருக்கிறார்

(3) இவரை பாதித்த துன்பம் வெகுநாள் நீடிக்காது.

(4) மகனின் செயலுக்கு வருந்த மாட்டார்.

(5) நல்ல இதயம் கொண்டவர்களுக்கு உதவ பல நல்ல இதயங்கள், மற்றும் , சக்திகள் காத்திருக்கின்றன.

(6) தான் இருக்கும் இடத்தையே சுவர்க்கமாக மாற்றும் சக்தி இவருக்கு கிடைக்கும்.

மகனின் செயல் மற்றும் பின்விளைவுகளை அலசுவோம்.

(1) தாயைத் தவிக்கவிட்டதற்கு, விசித்திரமான காரணங்கள் இருக்க வேண்டும். தாயைப் பற்றி கவலை கொள்ளாமல் தனித்து விட்டதாக பிறர் இவன் மேல், குற்றம் கண்டிருக்க வேண்டும். தாயை தன்னுடன் அழைத்துச் செல்ல முயற்சி செய்து, மனைவியின்

கட்டாயத்தால், கடைசி நேரத்தில் கைவிட்டிருக்க வேண்டும்.

(2) குறிப்பிட்ட ஊரில் வீடு நிலம் விற்ற பணம் மிக சிறியது. இந்த மகனுக்கு, ஒரு வாரத்தில் சம்பளமாக கிடைக்கும் பணம். அப்படியிருக்கையில் இந்த தவறை செய்ய பணம் ஒரு காரணமாக இருக்கமுடியாது. ஒரு அப்பாவியான, தன் காலில் நின்று தன் மகனுக்கு செய்ய வேண்டிய கடமையை தடையின்றி செய்த ஒரு தாயை ஒரு அவல நிலைக்கு கொண்டுவரக் காரணம் என்னவாயிருக்கும்?

(3) இந்த நிகழ்ச்சியை நினைவில் கொண்ட, மனைவியும், இதை பிற்காலத்தில் அறியவரும் மக்களும், மற்றும் எந்த உற்றார் உறவினரும், இவரிடம் மிகவும் எச்சரிக்கையாக நடந்து கொள்வார்கள் என்பது உறுதி, இல்லையா?.

(3) இதே மகன், பிற்காலத்தில், குற்ற உணர்வு காரணமாக, பல வகை மனம் மற்றும் உடல் நலக்கேடுகளால் பாதிக்கப்படலாம்.

(5) மண வாழ்கையில் வரவிருக்கும் தடங்கலுக்குப் பயந்து பல இளம் கணவர்கள் தடம் தப்புவதும் பிற்காலத்தில் வருந்துவதும் காலம் காலமாகத் தொடரும் ஒரு மிகப்பழைய நிகழ்ச்சி.

இப்படி ஒரு புத்திர செல்வம்

## கதை 3.

## மயிரிழையில் தப்பித்த மணி



மணியின் குடும்பத்தை, ஒரு மிகவும் நெருக்கமான, பாசங்களால் பிணைக்கப்பட்ட குடும்பம் என்பதற்கு ஓரு சரியான உதாரணமாகச் சொல்லலாம்.

மணியின் அப்பா பட்டாபிக்கு சொந்தங்கள் என்று சொல்லிக் கொள்ள நிறைய மனிதர்கள் உண்டு. மணியின் அப்பாவின் தம்பிகள் யாருமே சிண்டைப் பிய்த்துக்கொள்ளும் வகை இல்லை.

அண்ணனிடம் மரியாதை மட்டுமல்ல, அண்ணன் குடும்பத்தின் எல்லோருடனும் சிறிதும் பொய்யே கலக்காத பிரியம் கொண்டவர்கள். பெரும்பாலும், பட்டாபியின் பெற்றோர் மணியின் குடும்பத்துதன்தான் இருந்தார்கள்.

மொத்தத்தில் மணி சுமார் பத்து மனிதர்களின் சீராட்டுதலில் குழந்தையாக வளர்ந்தவன்.

மணி ஏதோ ஒன்றை விரும்பி அடையாத எதுவும் இல்லை. மணி, படிப்பில் படு சுட்டி.

இப்படிப்பட்ட இளைஞர்களை, படிப்பில் புத்தி செலுத்த முடியாத சக மாணவர்கள், பொறாமையின் காரணமாக, ஆங்கிலத்தில் நெர்ட் அல்லது புத்தகப் புழுக்கள் என்று குறிப்பிடுவார்கள்.

மணியைப்போல அன்பும் அரவணைப்பும் உள்ள குடும்பத்து இளைஞர்கள் யாருமே காதல் நட்பு என்று தடம் புரள்வதில்லை.

காதலுடன் மோதி, நண்பர்களுடன் உல்லாசமாகத் திரிந்து இளமையைக் கழித்த மாணவர்கள்தான் எத்தனை? தரமான கல்வியைத் தவறவிட்டு, வளமான வாழ்கை கைநழுவிப்போக, காலம் கடந்து கதறும் கூட்டத்தில் மணி போன்றவர்கள் இருப்பதில்லை.

சொல்வாரும் கேட்பாரும் இல்லாத இளசுகள் எல்லாமே மோட்டார் சைக்கிளில் எட்டு போட்டு, பஸ் படிக்கட்டில் சர்க்கஸ் செய்து பெண்களை இம்ப்ரெஸ் செய்வதில் கவனம் செலுத்துவது நாம் தினம் தினம் பார்க்கும் காட்சிதான்.

இந்த ரக இளைஞர்கள். எப்படியோ ஒரு மாதிரியாக குறைந்த மார்க்கில் பாஸாகி, அல்லது பல தடவை பரிட்சைகளில் பெயிலாகி, தெருத் தெருவாய் வேலைகிடைக்காமல் அலைவதைக் காணலாம்.

மணிக்கு படித்து முடித்து சில நாட்களிலேயே, ஒரு வெளிநாட்டு நிறுவனத்தில் ஒரு நல்ல வேலை கிடைத்து, கை நிறைய சம்பளம். இதை இங்கே நிறுத்துவோம்.

அன்று குடும்ப நண்பர் ஒருவரின் மகனான பாலனுக்கு திருமணம். மணி இந்தத் திருமணத்தில் மாப்பிள்ளைத் தோழன். திருமணம் னடன்து முடிந்தது.

திருமணம் முடிந்து இரண்டாம் நாள் முதலே விசித்திரமான ஈ–மெயில்கள் மணியை மொய்க்கத் தொடங்கின. தினம் ஒன்று.

உன்னை எனக்கு தெரியும், ஆனால் உனக்கு என்னை தெரியாது.

பா என்று தொடங்கும் பெயருடைய பெண்ணின் மேல் உனக்கு காதல். இது முதல் ஈமெயில்.

அடுத்த ஈமெயில், உன் மனைவி எப்படிப்பட்டவளாக இருக்க வேண்டும் என விரும்புகிறாய், என்று கேட்டு? இப்படிப் பல

இதை அனுப்பவது யார்? அனுப்பும் நோக்கம்தான் என்ன? மணிக்கு புரியவில்லை. தன்னுடன் இஞ்சினியரிங் படித்த மாணவர்கள் யாராவது இருக்குமோ! பல நாள் பொருத்து, அந்த மெயில்களுக்கு ஒரே ஒரு பதில் அனுப்பினான்.

*'உன்னைத் தெரிந்து கொள்ள அவசியம் இல்லை. யார் மீதும் எனக்கு காதல் மோதல ஏதும் இல்லை. என் பெற்றோர், என் வருங்கால மனைவியை, நான் தேர்ந்தெடுக்க உதவுவார்கள். எனக்கு இப்படிப்பட்ட மெயில்களை பொய் பெயரில் அனுப்புவது யாராக இருந்தாலும், அவன் அல்லது அவள், ஒன்றாம் தர கோழை '.*

சில நாள் இடைவெளி விட்டு ஒரு நாள் மணிக்கு ஒரு மெயில் வந்தது.

நான் உனது நண்பன் பாலனின் மனைவிக்குத் தங்கை. நான் என் அக்காவின் திருமணத்தில் கண்டதிலிருந்து உன்மேல் காதல் கொண்டுள்ளேன். நான் பெண்ணானதால், நான் முதலில் காதலை நேரடியாக தெரிவிப்பதை சமூகம் ஏற்றுக்கொள்ளது.

எனவே உனக்கு என்னை பிடித்தால் நீயே என்னிடம் தன் காதலை முதலில் தெரிவித்ததாக மற்றவருக்குச் சொல்.

மணி டமாலென்று விழுந்து விட்டான். எனக்கும் ஒரு காதலி! பார்வதி! விடுமுறைகளில் இருவரும் பார்க், ஹோட்டல் என்று போகாத இடமில்லை.

ஒருநாள் தன் காதலைத் தன் பெற்றோரிடம் தெரிவித்து விட்டதாகவும், அவர்கள் அதற்கு சம்மதித்து விட்டதாகவும் தெரிவித்தாள் பார்வதி.

ஒரு நாள், பாலன் வீட்டில் இல்லாத நேரமாக அமேரிக்காவில் உள்ள பாலன் வீட்டிற்கு போன. செய்து தன் சகோதரியுடன் பேசு ம்படி மணியைப் பார்வதி கேட்டுக் கொண்டாள்.

சகோதரியோ, தனக்கு இவர்களைப்பற்றி ஒன்றுமே தெரியாததைப் போலவே பேசி, நீ தான் என் தங்கையை உன் வலையில் சிக்க

வைத்து விட்டாய். எந்த காரணம் கொண்டும் என் தங்கையை கைவிட மாட்டேன், பெற்றோர்கள் எதிர்த்தாலும் நான் உன் தங்கையுடன் தான் வாழ்வேன் என்று கடவுள் பெயரில், உன் பெற்றோர் பெயரில் சத்தியம் செய் என்றெல்லாம் பல சத்தியங்களை வாங்கி, கடைசியில் ஆசிர்வதித்தாள்.

மணி இதை எல்லாமே உண்மை என நம்பினான். ஏனென்றால், மணி குடும்பத்தில் யாருமே, விளையாட்டாகக் கூட பொய் பேசு வது வழக்கம் இல்லை.

மணியின் பெற்றோர், மணி தெரிவித்த செய்தியை முதலில் நம்ப மறுத்தாலும், இந்த திருமணத்தை எதிர்க்கவில்லை.

ஆனால். பார்வதியின் பெற்றோர். ஒரு நாள் முன் அறிவிப்பில்லாமல் மணியின் வீட்டில் திடீரென்று நுழைந்தார்கள். அன்று மணிதான் ஏதோ தவறு செய்தது போலவும், தங்கள் பெண் அப்பாவி என்பத் போலவே பேசி, மணிமீது குற்றம் சுமத்தி பேசினார்கள். மணியின் பெற்றோர் உஷாரானார்கள்.

இவர்கள் ஏடா கூடமான மனிதர்கள். நேர்மையான மனிதர்கள் இல்லை என்பதை உணர மணியின் பெற்றோருக்கு அதிக நேரமாகவில்லை.

மணியோ, இதை எல்லாம் பொருட்படுத்துவதாக இல்லை. பெற்றோர் பெயரில், கடவுள் பெயரில் செய்த சத்தியம் தவறினால் என்ன கெடுதல் வருமோ! பயம் ஒருபுறம். காதல் மயக்கம் மறுபுரம் இழுக்க தடுமாறினான். நாட்கள் நகர்ந்தன.

இப்போது பார்வதியின் பேச்சில் பல மாறுதல்கள். ஒவ்வொரு நாளும் ஒரு செய்தி சொல்லுவாள்.

தன் அமெரிக்க அக்கா, தன் கணவனை அவன் தந்தையுடனான ஜாயிண்ட் பேங்க் அக்கௌண்ட்டை உபயோகிக்காமல் தங்கள் பெயரில் ஒரு புதிய அக்கௌள்ண்ட் தொடங்கி அதில் மொத்த காசை மாற்றிவிட்டார்கள். நாமும் அப்படியே செய்ய வேண்டும் என்றாள்.

என் அக்கா, அமெரிக்காவில், ஒரு பாரில் நுழைந்து ஒரு அரை பாட்டில் விஸ்கியை காலி செய்து டிஸ்கோ ஆடினாளாம். கணவனான. பாலனுக்கு இது வெறுப்பைத் தந்தாலும் ஏதும் சொல்ல முடியாமல் தொலைவிலிருந்து கோபமும் அழுகையுமாக

பார்த்துக் கொண்டிருந்தானாம்!

(மெதுவாக, நாமும் மது அருந்தி மிக சந்தோஷமாக இருந்தால் எப்படியிருக்கும்? என்று கேட்க முதல் முறையாக மணிக்கு, இங்கே ஏதோ கோளாறு தெரிகிறது.)

அடிக்கடி சொல்லுவாள், வயதுக்கு வந்தவர்கள், நண்பர்களுடன் பரிமாரிக்கொள்ளும் பேச்சுகளை வேறு யாரிடமும் பகிர்ந்து கொள்ளமாட்டர்கள்.

( பிற்காலத்தில், மணி ஆச்சரியப்பட்டான் – தாய் தந்தையுடன் பகிர்ந்து கொண்டால், சிறு பிள்ளைதனம். அதுதானே பொருள். இப்படி ஒரு ஆண்மகனை கட்டிப்போட, இந்த பெண்ணுக்கு என்ன சாமர்த்தியம்?)

மணியின் தாய் தந்தையர்கள், பார்வதியின் குடும்பத்தைப்பற்றி பேசும்போது, இந்த குடும்ப நபர்கள் மிகவும் தாழ்ந்த எண்ணங்கள் கொண்டவர்கள். அது மட்டுமில்லை, தன் குழந்தைகளையும் சரியான வழியில் வளர்க்கவில்லை என்று கூறியது சரிதான் என்ற எண்ணம் மணிக்கு முதன் முதலாக உதித்தது.

ஆனாலும், நம் வீட்டில் மருமகளாக வந்தால் காலப்போக்கில் குடும்பத்தில் உள்ள மற்ற நபர்களுடன் சேர்ந்து நல்ல சிந்தனைகளில் நல்ல செயல்களில் ஈடுபட வாய்ப்புண்டு என்று தன்னைத் தானே சமாதானம் செய்து கொண்டான் மணி.

அவ்வப்போது, குழந்தைகளுக்கு புத்திமதி சொல்வது போல பார்வதிக்கு நல்லது எது. தவறு எது என்று எடுத்துச் சொல்லுவான் மணி.

தன் செலவுக்கு பணம் வேணுமென்பாள். யாரோ ஒரு நண்பி கடன் கேட்டாள். அவளுக்காகப் பணம் வேண்டுமென்பாள்.

உண்மையான காதலர்கள் ஒருவர் மற்றொருவரின் அருகாமைத் தான் அதிகம் விரும்புவார்கள் என்று படித்திருக்கிறான். இந்த பெண்ணோ, சிறிதும் பயமின்றி அவனுடன் ஊர் சுற்றுவது. ஏதாவது பணமோ அல்லது பரிசோ, கேட்டுக் கொண்டே இருப்பது என்று வழக்கமாவதை கவனித்தான்.

சில நாளில் வேறு வேலை ஒன்று கிடைக்க வெளிநாடு ஒன்றுக்குப்

(ஜெர்மனிக்கு) பயணமானான். பின்னரும் இந்த பெண்ணின் காசுவேண்டும். காமிரா வேண்டும், நகை வாங்கி அனுப்பு என்ற பொருள் வேட்டை அவனை ஜெர்மனியிலும் தொடர்ந்தது..

பார்வதியின் பெற்றோர் திடீரென்று என்ன நினைத்தார்களோ, காலா காலத்தில் கட்டி வைக்காவிட்டால் பையன் தப்பித்து விடுவான் என்ற பயமோ? பார்வதியின் பெற்றோரும், பார்வதியும் மாறி மாறி உடனடி திருமண நிச்சயதார்த்தம் செய்யவேண்டும் என்று கட்டாயம் செய்ய, மணியும் தன் பெற்றோரை கட்டாயப்படுத்த (தனிப்பட்ட முறையில், இந்த குடும்பத்தில் இணைந்தால் மகனின் வாழ்க்கை சூனியமாகும் என்று மணியின் பெற்றோர் அறிந்திருந்தும்) நிச்சயதார்த்தம் நடை பெற்றது.

நிச்சயதார்த்தம் நடந்த அன்று, பார்வதியுடன் படிக்கும், (மணியின் தூரத்து உறவினரான) பெண் ஒருத்தி, இந்தப் பெண்ணா நமது அப்பாவி மணியின் வருங்கால மனைவி என்று அதிர்ச்சி அடைந்தாள்.

அப்பொழுது, அவள் பார்வதியை, அடியே, இந்த மனிதனையாவது ஏமாற்றாமல் இருப்பாயா என்ற கேள்விக்கு முடிந்தவரை பார்க்கிறேன் என்று பதிலளித்தாள். அடுத்து இருந்த மணியின் சகோதரியின் – ( கசின் ) – காதில் விழ, மணி குடும்பத்தில் சலசலப்பு உண்டானது.

மணியின் தாய் விரதங்கள், வேண்டுதல்களில் என்று முழு நேரமாக இறங்கினாள். இதை கேள்விப்பட்ட மணி மனம் உடைந்து போனாலும், இவள் சிறுமி தானே. காலமும் நாமும் சேர்ந்து இவளை மாற்றி விடலாம் என்று மனதைத் தேற்றிக்கொண்டான்.

நிச்சயதார்த்தம் நடந்து முடிந்ததும் (நம்மை ஒன்றும் செயய முடியாதென்று பார்வதியும் அவள் குடும்பத்தினரும் நினைத்தார்களோ என்னவோ) பார்வதியின் பெற்றோர் மணிக்கு அவ்வப்போது உத்தரவுகளை அனுப்புவதும், மணியின் பெற்றோரைப் பற்றியும், மற்ற நெருங்கிய உறவினர்களைப்பற்றி தவறாகவும் மரியாதை குறைவாகவும் பேசுவது அதிகரித்தது.

பார்வதியோ, எனக்கு நகைகள் வாங்கி அனுப்பு, டாலர்களை என் வங்கிக் கணக்கிற்கு அனுப்பிவை என்று விரட்டியவாறு

இருந்தாள்.

சில நாள் பொறுத்திருந்து, மணி, பார்வதியின் தாய் தந்தையருக்கு மென்மையாக எச்சரிக்கை ஒன்றைக் கொடுத்தான். தவறாக பேசு வது, திமிராக நடந்து கொள்வது என்ற போக்கை அவர்கள் மாற்றிக் கொள்ளாவிட்டால் இரு குடும்பத்திற்கும் நல்ல உறவு வளாராது எனறு. இவர்கள் அவற்றை லட்சியம் செய்வதாக இல்லை.

மொத்ததில் இந்தக் குடும்பம் தன்னை ஒரு முட்டாளாகவே எண்ணி வந்திருக்கிறார்கள். தன்னை மணியாகப் பார்க்காமல், மணிபர்சாக மாத்திரம் பார்த்து, இந்த குடும்ப நபர்கள் நாடகம் ஆடியிருக்கிறார்கள் என்பது மணிக்குப் புரிந்தது.

ஒரு கட்டத்தில், தனக்காக தங்கள் அதிருப்தியையும் மீறி, மகனின் மகிழ்சியை மட்டும் மனதில் கொண்ட தாய் தந்தையரையும், காசு, தங்கம், பரிசுகள் என்று சுற்றிய பார்வதி வீட்டாரையும் ஒப்பிட்டுப் பார்த்த மணிக்கு ஒரே அதிர்ச்சி.

தாயின் வேண்டுதல்கள், கடவுள் நம்பிக்கை வீணாகவில்லை.

மேலும் மேலும் தொடர்ந்த பார்வதி வீட்டாரின் சதிவேலைகள் மணியின் மனக் கண்ணைத் திறக்க மணி பார்வதியின் வீட்டாருடன் தொடர்பை சிறிது சிறிதாக துண்டிக்கலானான்.

இதை சற்றும் எதிர்பார்க்காத பார்வதியின் வீட்டார், மணி குடும்பத்தை கோர்ட்டுக்கு இழுப்பதாக மிரட்டல் விட, இவர்கள் யார், எப்படிப் பட்டவர்கள் என்று மணிக்கு முழுவதும் புரிந்தது.

மணி பார்வதியின் ஈ–மெயிலைக் குடைந்தான், இந்த பெண் பல வேறு இளைஞர்களுடான தொடர்பு, மற்றம் ஆட்ட பாட்டங்கள் வெளிச்சத்திற்கு வர, பார்வதியுடனான தொடர்பைத் துண்டித்து, முற்றிலும் தெளிவு பெற்றான். இப்போது, தாய் தந்தையினரின் மேல் உள்ள மதிப்பு பல மடங்கு உயர்ந்தது.

இந்த மணியான மணியை இழந்த பேராசைக் கும்பல், பார்வதியும் அவள் வீட்டாரும் வேறு ஒருவனை பிடித்து தனது அத்யாயத்தை தொடர்ந்தார்கள்.

இப்போது மணியின் பெற்றோர் ஏற்படுத்தி தந்த திருமணத்தை முழுமனதுடன் ஏற்று மகிழ்சியாக இருப்பதாக கேள்வி.

ஆனால் எத்தனை முத்தான மணிகள் சதிகாரர்களில் பேயாட்டத்தில் விழுந்து, சொந்த பந்தங்களை இழந்து நடை பிணமாக வாழ்ந்து வருகிறார்கள் என்பது செய்தியாக வருவதில்லை.

அப்படி வந்தாலோ, மற்ற இளைஞர்கள் தப்பித்துப் பிழைக்க ஒரு சந்தர்ப்பம் கிடைக்கும். இந்த நிகழ்ச்சியையும் இப்போது அலசு வோம்.

விமரிசனம்

இந்த கதையில் வரும் இரு பெற்றோரில், மனியின் பெற்றோர் முதல் ரக அல்லது உத்தம வகையாகவும் பார்வதியின் பெற்றோர் (அதம அல்லது கீழ்தரமான) மூன்றாம் தர மனிதர்களாகவும் நாம் கணிக்கலாம்

தான் விரும்பா விட்டாலும், மகன் மகிழ்ச்சிக்காக, தனது மகன் விருப்பத்தைப் பூர்த்தி செய்தது தன்னலம் நினைக்காத மணியின் பெற்றோரின் மேலான தன்மைக்கு உதாரணம். இவர்கள் உத்தம பெற்றோர் வகை.

பெற்ற குழந்தைகளுக்கு நல்ல அறிவும் நல்ல வாழ்க்கையும் அமைத்து தரும் முயற்சி செய்யாமல், அவர்களை வசதியுள்ள வாலிபர்களுடன் தொடர்பு கொள்ள வைத்து, அதன் மூலம் தனது சுகத்தைத் தேடும் பார்வதியின் பெற்றோர் போன்ற மனிதர்களுக்கும் எந்தக் காலத்திலும் குறைவிருந்ததில்லை.

மணி போன்ற பிள்ளைகள், 20 வயது வரை கல்வி கேள்விகளில் மனதைச் செலுத்தி, சமூகத்தில் மற்றும் பொருளாதார வாழ்வில் பெரிய இடத்தை பெறுவது உறுதி.

ஆனால், ஒரு காலகட்டத்தில், இவர்கள் ஒரு குழப்பத்தில் சிக்குவார்கள். நமது வயதில் உள்ள இளைஞர்கள், உல்லாசம் மற்றும் கேளிக்கைகளில் ஈடுபட்டு, பெண்களோடு சுற்ற நாம் புத்தகப் புழுவாய் நெளிகிறோமா? என்ற கேள்வி மனதில் எழும்.

அதோடு, நாம் கல்வியில் மூழ்கி, வாழ்க்கையில் முக்கியமான எதையோ இழந்து விட்டோமா? என்ற ஒரு சந்தேகம். இது இவர்களைத் தடுமாற வைக்கும். அப்படிப்பட்ட நேரத்தில், இவர்கள் கீழ்தர மக்களின் சூழ்ச்சியில் சிக்குவார்கள்.

பார்வதியின் பெற்றோர், பெண்ணைப் பணயமாக வைத்து செல்வம் பெற்று பெருவாழ்வு வாழ துடிப்பது தெரிகிறது.

இப்படிப் பட்டவர்களுக்கு வெட்கம் மானம் வாழும் சமூகத்தில் நம்மை எப்படி தாழ்வாக நினைப்பார்கள் என்ற சிந்தனைகள் இல்லை. இவர்களுக்கும் விபசாரத்தில் ஈடுபடுபவர்களுக்கும் அதிக வித்யாசம் இல்லை, அல்லவா? இவர்களுக்கு என்று ஒரு கூட்டம் எப்போதும் உண்டு.

மணி தன் தவறை சரியான நேரத்தில் உணராது, திருமணம் வரை சென்றிருந்தால், அவன் வாழ்க்கை நரகமாகியிருக்கும்.

பெற்றோரின் மீது நம்பிக்கை கொள்ளாமல் தன்னிச்சை யாக செயல்பட்டு வாழ்வில் தோற்ற பிள்ளைகள் ஒருபக்கம் இருக்கிறார்கள்.

பார்வதி போன்ற பல பெண்கள், பெற்றோரின் மீதுள்ள நம்பிக்கையின் காரணமாக துயரங்களை எதிர் கொள்கிறார்கள்.

ஆடு, கசாப்புக்காரர் பின்னே அமைதியாக செல்வதற்கும், தவறான ஆசைகளுடன் தன் பிள்ளைகளின் வாழ்க்கையை நாசம் செய்யும் பெற்றோரை பின்பற்றும் பிள்ளைகளுக்கும் வேறுபாடுகள் மிக குறைவு. அறிவின் அடிபடையில் இல்லாமல், நம்பிக்கையின் அடிப்படையில் நடைபெரும் வாழ்க்கை இப்படித்தான் இருக்கும்.

# இப்படியும் சில புத்திரச் செல்வங்கள்

## கதை 04

## வித்யாசமான வித்யா?



ஒரு கால கட்டத்தில், சுமார் 20 வருடம் முன்னால், பிள்ளையைப் பெற்றவர்கள் தங்களைத் தேவர்களாகவும், பெண்ணைப் பெற்றவர்களை ஏதோ அசுரர்களைப் போலவும் நடத்தியது உண்டு.

(ஆமாம் அசுரர் யார்? அரக்கர்களும் அசுரர்களும் ஒன்றா? பெரிய பற்கள், காட்டிமிராண்டிகளைப் போன்ற கரடுமுரடான தோற்றம். நளினம் இல்லாத அசைவுகள். இதுதான் அசுரர்களின் இலக்கணமோ? வார்தைகள் பேசுமானால், அசுரருக்கு இந்த விளக்கம் சரியில்லை.)

அ—சுர் என்றால், சுரம் தப்பியவர்கள் என்ற பொருள் வரும். நமக்கு ஒத்துவராத எல்லோருமே அசுரர்கள்தான்.

பிள்ளைகளின் பெற்றோர், பெண் பார்க்க சென்றுவிட்டு, தாங்கள் ஊருக்கு சென்று தபாலில் கடிதம் போடுவதாக சொல்லிவிட்டுப் போவார்கள். பெண்ணை பெற்றவர்கள் தினம் போஸ்ட்மேன் வரவை எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள்.

பெண் பார்க்க வந்தவர்கள் பொண்ணுக்கு மூக்கு சிறியது, கூந்தல் நீளம் குறைவு என்றெல்லாம் குறை சொல்வார்கள்..

அதிக வரதட்சினை கேட்பது, தங்கம் இவ்வளவு வேண்டும், வெள்ளி இவ்வளவு, பீரோ, கட்டில், ஸ்கூட்டர் என்று அவர்கள் வீட்டில் இல்லாத எல்லாமே பெண்ணைப் பெற்றவர்கள் தரவேண்டும் என்று டிமாண்ட் செய்வார்கள்.

அதன் பலனோ என்னவோ, இந்த காலத்தில் நம் நாட்டின் எண்ணிக்கையில் பெண்கள் குறைவாகவும் ஆண்கள் அதிகமாகவும் இருக்கிறார்கள். அன்று ஆண் பிள்ளைகளைப் பெற்றவர்கள் படுத்திய பாடு பரவாயில்லை என்று நினைக்ககும் அளவுக்கு இன்று, ஆர்பாட்டம் செய்கிறார்கள், பெண்ணைப் பெற்றவர்கள்.

இந்த கதையில் காணும் நிகழ்ச்சி சிறிது வித்யாசமானது.

கதையைப் பார்ப்போம்.

வித்யா

புது தில்லியில் பிறந்து, படித்து வளர்ந்தாள் வித்யா. பெற்றோருக்கு ஒரே மகள். அண்ணன் தம்பி, அக்கா தங்கை என்ற உடன் பிறப்புகள் யாருமே இல்லை.

ஸ்கூல் பீஸ கட்டுப்படியாகாது என்ற ஒரே கவலையில் ஒரே ஒரு குழந்தை போதுமென்று வித்யாவின் பெற்றோர் ஒரு காலத்தில் முடிவெடுத்தார்கள். அது தவறு என்று இன்று நினைக்கிறார்களோ!.

தில்லியை அடுத்த குர்காவ் என்ற இடத்தில் ஒரு மல்டி நாஷனல் சாப்ட்வேர் கம்பெனியில், விதயா ஒரு எஞ்சினியர். திருமண வயதை நெருங்க, அப்பா அம்மாவுக்குப் பல கவலைகள்.

நல்ல இடத்தில் பெண்ணுக்கு கல்யாணமாக வேண்டும். ஆனால் இன்று வரை தங்கள் வாழ்க்கைக்கு ஆதாரம் என்று இருந்தது

இந்த ஒரே ஒரு பெண்தான் அவளும் தங்களிடமிருந்து பிரிந்து போய் விடுவாள். வயதான காலத்தில் நமக்கு ஆதரவு இல்லாமல் போய்விடுமே என்று நினைத்தார்கள்! கவலை நியாயம் தானோ?

பல குடும்பங்கள் சம்பந்தம் பேச வந்தன. ஒரு மாதிரியாக பெண்ணின் பெற்றோர் தங்கள் விருப்பத்தை தெரிவித்த மறுவினாடி பேச வந்தவர்கள் காற்றில் கரைந்து போனார்கள். அப்படி என்னதான் விருப்பம் என்கிறீர்களா? வரும் மருமகன் மகனாக இருக்க வேண்டும் என்பதே அந்த விருப்பம்.

இந்த விருப்பத்தால் பிள்ளை வீட்டு மனிதர்கள் தலை தெரிக்க ஓடுவதேன்?

அவனவன் ஒரு பிள்ளையைப் பெற்று வளர்த்தால் அதையும் பிடுங்கப் பாக்கிறார்களே, இந்த மனிதர்கள் என்ற எண்ணம் தானோ?

குடும்பம் கூட்டு ஆலோசனை நடத்தியது. உண்மையைச் சொன்னால் ஓடிப் போகிறார்கள். உ.ண்மையை சற்று நேரம் தூங்க வைப்போம் என்று முடிவு செய்தார்கள்.

அடுத்த குடும்பம், ஒரு கல்யாண புரோக்கர் முன் வர, பெண் பார்க்கும் படலத்தில் நுழைந்தது.

நடக்கும் கால கட்டத்தில், கல்யாண வைபவங்களில் ஒரு சில புதிய, ஆனால் நல்ல ஆரோக்கியமான முன்னேற்றங்கள் உள்ளன. அதை எடுத்துச் சொல்லுவது தானே நியாயம். அதில் முக்கியமானது டிஸ்கஷன் நேரம்.

பெண் பார்க்கும் படலம் வெற்றிகரமாக நிறைவு அடைந்தால், உடனே பெண்–பையன் இருவரும் தனியாக பல நிமிஷ நேரம் பேசி, தங்கள் தனிப்பட்ட விருப்பு விருப்புகள், பிற்காலத் திட்டங்கள் மட்டுமல்லாமல் பலவித எண்ணங்களை பகிர்ந்து கொள்வது வழக்கம்.

இந்தக் கட்டம், இருவருக்கும் இருவரின் எண்ணங்கள் மற்றும் எதிர்கால திட்டங்களில் மனம் ஒத்திருக்கிறதா என்று அறிய உதவும். நல்லது தானே?

இப்போதெல்லாம், ஐ டி யில் வேலைபார்க்கும் பலர் விவாக ரத்து கோர்ட் எனப்படும் குடும்ப கோர்ட்களுக்கு அதிகமாக வருகை

தருவதாக எனது வக்கீல் நண்பர் தெரிவிக்கிறார்.

மேற்படி டிஸ்கஷன், நிச்சயமாக விவாக ரத்து சான்ஸைக் குறைக்க உதவும் இல்லையா?

**ரமண்.**

ரமண், அதே தில்லியில், ஒரு ஐ ஏ எஸ் அதிகாரியின் ஒரே மகன். எஞ்சினியரின் படிப்பு, எம் என் சி யில் வேலை. பல முறை அமெரிக்கா, ஐரோப்பா சென்று வந்தவன்.

பெண் பார்க்க வித்யாவின் வீட்டிற்கு ரமண், அவனுடய அம்மா, அப்பா மூவரும் சென்றார்கள்.

திருமணம் செய்து கொள்வதில் ரமண் – வித்யா, இருவருக்குமே சம்மதம், இரு வீட்டாருக்கும் சம்மதம். இதை தொடந்து, வித்யாவும் – ரமணும் பெரியவர்கள் யாரும் அருகிலில்லாமல், தனியாக பேசும் கட்டம்.

இந்த கட்டம்தான், திருமணம் நடக்குமா இல்லையா என்று தீர்மானிக்கும்.

ரமண், தன் எண்ணங்களை வெளியிட்டான்.

தில்லியில் தனது தந்தைக்கு ஓரு வீடு இருப்பதால், தில்லியில் உள்ளபோது அந்த வீட்டில்தான் வசிக்கவேண்டும் என்றான். அதோடு பெற்றோருக்கு ஒரு மகன் என்பதால், ரிடையரானதும் பெற்றோர் எப்போழுதும் தன்னுடன் இருப்பார்கள் என்றும் தெரிவித்தான்.

இதைக் கேட்ட வித்யா, எனக்கு தெரியாதா? இதுதானே நமது கலாசாரம். இதை சொல்லித்தான் தெரியவேண்டுமா என்றாள்.

தனக்கு ரமணின் அம்மாவை மிகவும் பிடித்திருப்பதாகவும், அவர்களுடன் வாழ எந்த பிரச்சனையும் இருக்காது என்றாள்.

கல்யாணம், ஜாம் ஜாம் என்று நடந்தது. ரமணின் உள்ளூர் நண்பர்கள் மட்டுமில்லாமல், நிறுவனத்தின் வெளிநாட்டு இஞ்சினியர்கள் சிலர் கூட வந்திருந்தார்கள். விருந்து விளையாட்டு என்று அமர்க்களம்தான்.

வெளிநாட்டு விருந்தினர்களுக்கு திருமண்அத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் நமது கலாசாரம் கல்யாணச் சடங்குகளை சிலர்

போட்டி போட்டுக்கொண்டு விளக்க, நிகழ்ச்சிகளை வெளிநாட்டு விருந்தினர்கள் வீடியோவில் சுட்டுத்தள்ள, விருந்தும் முடிந்து, விடை பெற்றுக் கொண்டு பலர் வெளியேறினர்.

அடுத்த கட்டமாக, மணமகன் வீட்டில், மணமகளுக்கு வரவேற்பு அளித்து, மணமகள் புகுந்த வீட்டில் குத்து விளக்கு ஏற்றும் ஒரு சம்பிரதாயம்.

முன்னேற்பாடுகள் செய்ய ஒரு காரில் சில நெருங்கிய உறவுகள் முன்னதாகவே ரமண் வீட்டுக்கு போய்விட்டார்கள். அடுத்து சில கார்களும் சில மனிதர்களும் தயார் நிலையில் இருக்க, பெண்ணைத்தான் காணோம்.

பெண், தன் அறையிலிருந்து, வெளியே வர மறுக்கிறாள் என்ற தகவல் மட்டும் வெளியே வருகிறது. ரமண் வீட்டு பெரியவர்களை பார்க்கவோ, பேசவோ மறுக்கிறாள்.

கடைசியாக, ரமண் போகிறான். இப்போது வித்யாவின் பேச்சும் போக்கும் அதிசயத்தையும் அதிர்ச்சியையும் ரமணுக்குத் தருகிறது.

நான் உங்கள் வீட்டுக்கு வரவேண்டுமானால், உங்கள் தந்தையின் வீட்டை என் பெற்றோர் பெயருக்கு மாற்ற வேண்டும். உங்கள் அம்மாவின் முகம் சுத்தமாக எனக்கு பிடிக்கவில்லை. அவர்கள் நான் வசிக்கும், வீட்டில் மட்டுமல்ல, அந்த இடத்தின் அருகில் கூட இருக்கக்கூடாது. பட்டியல் நீண்டது ...

பெண்ணின் தாய் தந்தை இருவரும், மௌனம் சாதித்தனர். ரமண் கேட்டான், அன்று, பெண் பார்க்கும் நாளில் பேசிய பேச்செல்லாம் ???

நான் இன்னமும் சொல்ல வேண்டியதை எல்லாமே முடிக்க வில்லையே. அவசரப் பட்டால் எப்படி? இப்போது வித்யா தொடர்ந்தாள். என் தாய் தந்தை இருவரும் என்னோடுதான் இருப்பார்கள். இதற்கெல்லாம் சம்மதமானால், இவைகளை சட்ட பூர்வமாக நடைமுறைப்படுத்திய பிறகு உங்கள் வீட்டில் காலடி வைப்பேன் என்று முடித்தாள்.

ரமணின் பெற்றோர், இந்த பேச்சின் நடுவில் புகுந்தார்கள். எங்கள் வாழ்கை முடிந்துவிட்டது. நீங்கள் சிறியவர்கள்,வாழ வேண்டியவர்கள். இந்த பெண் கேட்டதெல்லாம் செய்ய நாங்கள்

சம்மதிக்கிறோம் என்றார்கள்.

வித்யா முகத்தில் வெற்றி அடைந்த மகிழ்ச்சி.

இப்போது ரமண் தொடர்ந்தான்.

மாலையை கழட்டும் முன்னாலேயே பேசிய பேச்சு மாறினால், வரும் காலத்தில் என்ன என்ன நடக்குமோ. இதுதான் உன் முடிவென்றால், இப்போதே என் முடிவையும் சொல்கிறேன்.

நாம் சட்டப்படி பிரிய ஏற்பாடு செய்வோம் என்று கூறி, வந்திருந்த விருந்தினர்கள் அனைவருக்கும் நன்றி சொல்லி, மரியாதைகள் செய்து வழி அனுப்பதில் கவனம் செலுத்தினான்.

ரமண் செய்தது, சரியா தவறா? வித்யா எதற்கு வித்யாசமாக நடந்து கொண்டாள்? இந்த நின்று போன கல்யாணம் மீண்டும் உயிர் பெறுமா? விவாக ரத்துதான் இதன்முடிவா?

## அலசல்

இன்று பாரதி உயிருடன் இருந்திந்தால் பெண் விடுதலையைப் பற்றி தான் பாடிய பாடல்களை திரும்பப் பெற்றிருப்பார்.

கை நிரைய காசு சம்பாதிக்கும் பெண்களுக்கு, திருமணம் ஒரு சிறைபோல மாறிவிட்டது. திருமணமான கையோடு விவாகரத்து கோர்ட்டில் வரிசையில் இருக்கும் ஜோடிகள் எத்தனை?

அதிக செலவில் ஊரைக் கூட்டி படாடோபமாக நடத்தப்படும் திருமணங்கள் என்கிற சடங்குகள் காலாவதியாகிவிட்டன. இதிலும் வெள்ளைக்காரனைப் பின் பற்றுவோம். திருமணம் நிச்சயம் செய்யும் தினத்தன்றே, கோர்ட் – கச்சேரி ஆகியவற்றின் தேவை இல்லாமல் தானாகப் பிரியும் பத்திரங்களில் கையெழுத்திடும் வைபவத்தையும் நடத்த வேண்டும்.

பிட்சா, பர்கரைநமது கல்லசாரத்தை தனதாக்கிக் கொண்ட சமுதாயம் லிவ்–இன் என்கிற வாழ்க்கை முறையையும் சே ர்த்துக் கொள்ளலாம். பிறகு கேட்கவே வேண்டாம். சாகும் வரை அலங்காரப் பொருள்களை அள்ளி வந்து, பாஷன் உடை களை அணிந்து கொண்டு அடுத்த திருமணத்திற்கு என்றுமே தயாராகவே இருக்கலாம்.

சில பிள்ளைகளால் பல தொல்லைகள்

# கதை 05

# இது கமலாவின் கதை



பெற்றோரின் பேச்சை கேட்காததால் பலர் வாழ்கையில் துன்பம் அடைவது நாம் எல்லோரும் அறிந்ததே. ஆனால் பெற்றோரின் பேச்சைச் கேட்டதால் மகள் அவதிப்பட்டதை சொல்லுகிறது கமலாவின் கதை.

தாய் சொல்லைத் தட்டாத ஒரு பெண் தான் கமலா.

தந்தை சொல்லை தட்டுவாளா? இந்த பிரச்சனைக்கு இடமே இல்லை. அவர்கள் வீட்டில், கொட்டாவி விடுவதற்காக. ச ாப்பிடுவதற்க்காக என்ற சில தவிக்க முடியாத அத்யாவசியத்திற்கு மாத்திரமே தந்தை தன் வாயைத் திறக்க அனுமதிக்கப் பட்டிருக்கிறார்.

கமலா, மங்களூர் பக்கம். பிறந்து வளர்ந்து படித்தது எல்லாமே பங்களூரில் தான். பெற்றோருக்கு ஒரே பெண். சு ருக்கமாகச் சொன்னால் பார்க்க அழகான, படிப்பில் சூட்டிகையான பெண்.

நல்லதொரு எஞ்சினியரிங் காலேஜில் இடம் கிடைத்து, நன்றாகப் படித்து அதிக மார்க் எடுத்து, காம்பஸ் செலக்ஷனில் வேலையும்

கிடைத்தது.

ஏதோ தூரத்து உறவில் அமெரிக்காவில் ஒரு பையன் – அஷ்வின், என்று பெயர் – இருப்பதைக் கமலாவின் தாய் கண்டு பிடித்தாள். கமலாவின் அழகு படிப்பு பையனின் பெற்றோரின் நல்ல குணம் ஆகியவை வரதட்சனை, தங்கம் என்ற வழக்கமான தடைகள் ஏதுமின்றி கல்யாணம் ஜாம் ஜாம் என்று நடந்தது – கமலா, வேலையை கைவிட்டு, அஷ்வினின் கைபிடித்தாள். அமெரிக்கா போனாள். இரண்டு வருடங்கள் அப்படியும் – இப்படியும் என்பார்களே, அப்படிக் கழிந்தது.

இப்போது கமலா பங்களூரில் ஒரு பெரிய பன்னாட்டு சாப்ட்வேர் கம்பெனியில் இண்டர்வியூவுக்குக் காதிருக்கிறாள். அவள் முறை வந்தது.

அவளைப் பேட்டி காண்பது ஸுந்தரேசன். ரிடையர் ஆன மனிதர். பல நிறுவனங்களில் எஞ்சினியரிங் துறையில் குப்பை கொட்டி சிறிது நல்ல பெயர் சேர்த்துக் கொண்டதாலோ என்னவோ, அந்த நிறுவனம், தேவைப்பட்ட எஞ்சினியர்களைத் தேர்வு செய்ய இவரை அமர்த்தியது.

முதல் சுற்று, அதாவது, படிப்பு பிடித்தது பிடிக்காதது, தெரிந்தது, தெரியாதது எல்லாமே முடிந்து, டெக்னிகல், அதாவது தொழில் சம்பந்தபட்ட கேள்விகள் தொடங்கும் நேரம்.

இதுவரை நடந்த பேட்டி, வேலை தேடி வந்தவருக்குத் தான் நினைப்பதைக் கோர்வையாக, தவறில்லாமல் தங்கு தடை இல்லாமல் சொல்லத் தெரிகிறதா என்றும், இவருக்கு புதிய விஷயங்களை கற்றுக்கொள்ள ஆற்றல் இருக்கிறதா என்றெல்லாம் அறிவதற்கே.

நீ அமேரிக்காவிலிருந்து வந்து இங்கே வேலை பார்ப்பது சரி. உன் கணவனுடைய பின்னணி என்ன? அவருக்கும் வேண்டிய தகுதி உண்டென்றால் அவரையும் தகுந்த வேலை ஒன்றிக்காகக் பேட்டிகாணலாமே என்றார் ஸுந்தரேசன்.

உடனே, கமலாவின் கண்களில் தாரை தாரையாக கண்ணீர். இந்த பெரியவருக்கு அந்தப் பெண்ணை சமாதானம் செய்வது ஒரு பெரிய பிரச்சனையாகவே இருந்தது, .

திருமணம் முறிந்துவிட்டதாக பதில் சொன்னாள், கமலா. காரணம் கீழே வருமாறு.

திருமணம் முடிந்து அமெரிக்கா போன மகள் வாரம் ஒரு முறை தாய்க்குப் போன் செய்வாள். அப்போது தாய் சில அறிவுறைகளை பெண்ணுக்குத் தருவாள். கமலா தன் கணவனிடன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை. முக்கியமாக, தன் கணவனை அவனது தாய் தந்தையரிடம் பேச விடாமல் செய்ய வேண்டும், கணவன் தன் பெற்றோர், சகோதர சகோதரிகளுக்குப் பணம், பரிசு அனுப்புவதைத் தடுக்க வேண்டும் என்றெல்லாம் சொல்வாள்.

இரண்டு வருடங்கள் தாய் சொன்ன எல்லாவற்றையும் முறையாக செயல் படுத்தியும் கமலா வெற்றியடையவில்லை. மாறாக அஷ்வினுக்குக் கமலா மீது வெறுப்பும், தன் குடும்ப நபர்கள் மீது நெருக்கமும் அதிகரித்தது. இரண்டாம் வருட இறுதி. கமலாவின் அம்மா வகுத்த கடைசித் திட்டம் தோற்க, விடுமுறையில் வந்தபோது மனைவியை விட்டுவிட்டு தான் மட்டும் அமெரிக்க திரும்பினான் அஷ்வின். கமலாவின் அம்மாவோ, அஷ்வினைத் திட்டி, ஊரைக்கூட்டி, கோர்ட் கச்சேரி என்று மிரட்ட அஷ்வின் மற்றும் அவன் குடும்த்தினரிடம் கொண்ட தொடர்பு மொத்தமும் துண்டிக்கப்பட்டது.

இப்போதும், கமலாவுக்கு அம்மா சொல்படி நாம் நடந்து கொண்டது சரியா தவறா என்று சிந்திக்கும் அறிவு வரவில்லை. தாம் எதையோ இழந்தது புரிகிறது. தந்தை இதில் தன் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவில்லை. நினைவு தெரிந்த நாளாக அவர் சிந்திப்பதை தனது வழக்கமாக கொள்ளவில்லை. இப்போது மட்டும் என்ன சொல்லுவார்?

கமலாவுக்கு வீட்டில் இருக்க போரடித்தது. வேலைக்கு மனுபோட ஆரம்பித்து, இது வேலைக்கான முதல் பேட்டி.

ஸுந்தரேசன் இந்த பெண் பாதிக்கதையை சொன்னதுமே, மொத்த கதையையும் ஊகித்தார்.

தான் வேலைக்கு தகுதியை நிர்ணயிக்கும் நிலையிலிருந்து மாறி நின்று ,ஒரு நல்ல தந்தையின் நிலையிலிருந்து பேசுவதாகத் தொடங்கினார்.

உன் அறிவுக்கும் கல்வித் தகுதிக்கும் என்றும் ஒரு வேலை கிடைக்கும். ஆனால், காலம் தாழ்த்தினால், பிரிந்த புது உறவு ஒட்டாது. இன்றய இளமை நாளைய தினம் உதவாது. பெற்றோர் மற்றும் பெரியவர்கள் வாழ்க்கையின் இறுதியில் இருக்கிறார்கள்.

கணவனின் மனிதர்களை அன்புடனும் நல்ல இதயத்தோடும் அணுகுதல் அவசியம்.

ஓரிரு வருடங்களுக்கு பிறகு, தாயின் மனம் மாறினால், தொடர்புகொள்.

வேகமாக சென்று, கணவனை, அவன் உறவுகளை சேர்ந்து. சரண் அடைதல் முதல் வேலையாக இருக்க வேண்டும். தவறுகளுக்கு தவறாமல் மன்னிப்பு கேட்க வேண்டும்.

பழய வழியில் திரும்புவதில்லை என்று உறுதி கொண்டு, விட்ட வாழ்க்கையை தொடருவாயாக என்று அறிவுருத்தினார்.

கமலா இப்போது அமெரிக்கா திரும்பிவிட்டார்.

கமலாவும், அவள் கணவன் அஷ்வினும் ஸுந்தரேசனுக்கு நன்றி சொல்லி ஒரு நீளமான ஈ மெயில் ஒன்றை அனுப்பினார்கள். சுந்தரேசனுக்கு இந்த அனுபவம் புதியது இல்லை!

விமரிசனம்

பெற்றோர் தன் குழந்தைகளின் நலனை கருதி வழி காட்டுவது இயல்பு. பெற்றோரின் சொல்லை மதித்து அதன்படி நடந்து கொள்வது நல்ல குழந்தைகளின் நல்ல இயல்பு.

ஆனால் கமலா விவரித்த ஒரு குடும்பம், தாயின், சர்வாதிகாரப் போக்கு, கணவனை மதிக்காத ஒரு நடத்தை இது எல்லாமே ஒரு நல்ல மகிழ்சிகரமான குடும்பம் உருவாக இடம் தராது. கணவன் தன் குடும்ப நபர்களிடம் நெருக்கமாக இருந்தால் அதை பிரிப்பானேன்? அந்த கணவனின் வருமானம் அனைத்தையும் தான் அனுபவிக்க நினைத்து மகளை கருவியாக உபயோகித்தாளோ?

அல்லது கமலாவையும் தன்னைப்போல ஒரு மனைவியாக (அரக்கியாக) மாற்ற முயன்று தோற்றாளோ? முடிவு என்ன? நல்ல ஒரு மகளின் எதிர்காலத்தை வெற்றிடமாக மாற்றியதுதானே?

கமலாவின் தாயார் புரிந்து கொள்ளாதது:

தனக்கு கிடைத்ததைப்போல எல்லா ஆண் மகன்களும் (மனைவியின் பேயாட்டத்திற்கு) பயப்பட மாட்டார்கள். மனைவிக்கு அடிமையாகி, சொல்லிழந்து சொந்த பந்தங்களையும் இழக்க பலர் தயாராக இருக்கமாட்டார்கள் என்பதே அது.

தான் இதுவரை தன் வாழ்வில் செய்த தவறு போதாதென்று இன்னமும் தன் மகளின் மண வாழ்வில் பிளவை ஏற்படுத்திய கொடுமை. அதோடு நில்லாமல், மகளை வேலைக்கு அனுப்பி கணவனுடன் என்றும் சேந்து வாழ இடம் தராமல் செய்யும் கொடுமையையும் என்னென்பது?

கமலாவின் சுற்றத்தாருக்கு இது புதிய அனுபவமாகவும், கமலாவின் வாழ்கையில் ஒரு திரும்பு முனையாக இருக்கலாம். வழக்கமாக ஸுந்தரேசன் சந்திக்கும் பலரின் பரிதாபமான வாழ்கை களில் இதுவும் ஒன்று.

அவருடைய அறிவுறையை மதித்து கமலா முயற்சி செய்து, வெற்றியும் அடைந்தாள். வழி நடத்த யாரும் இல்லாமல், தோல்விகளை வாழ்நாள் முழுவதும் சுமக்கும் நபர்கள் எத்தனை பேர்? இந்தக் கதைகள், அவர்களை காப்பாற்றுமா?

# கதை 06
# கருகிய கனவுகள்



பெரிய பெண், ரேவதி சொல்கிறாள்.

அப்பா, மஹாதேவன் ஒரு மார்கெட்டிங் மானேஜர். ஊர் சுற்றுவது அவர் வேலை. என்னையும் சேர்த்து, என் அப்பா அம்மாவாவுக்கு, மூன்று பெண்கள்.

பெண்கள் யாரையுமே அப்பா பிரியமாக நடத்தியது இல்லை. நாங்கள் பெண்களாய் பிறந்ததால் அவருக்கு கோபம் என்று தெரிகிறது. இதற்கு அவ்வப்போது அம்மாவுக்கும் திட்டு விழும். அம்மா என்ன செய்வாள் பாவம்?

அம்மாவுக்கு 8 கிளாஸ்வரைதான் படிப்பு. நினைவு தெரிந்த நாளாய் துணிக்கடை நகைக்கடை ஆகியவற்றில் சேல்ஸ கேர்ல் (உதைக்கிறதே, போகட்டும், சேல்ஸ் மாமி) வேலை செய்தாள். வரும் வருமானத்தில், மூவரையும் கான்வெண்டில்தான் படிக்க வைத்தார்கள்.

அம்மாவின் தயவில், மூவருக்கும, ஒரு கட்டம் வரை கேட்டதெல்லாம் கிடைக்கும். இப்போது, அப்பா வேலைக்கு

போவதில்லை. சுயமாக வியாபாரம் செய்கிறாராம்.

இவர் எங்கே உருப்படப்போகிறார்‘ என்று அப்பா இல்லாத போது, அம்மா அலுத்துக்கொண்டாள்.

சொந்தமாகத் தொழில் செய்வதற்கு நல்ல வார்த்தைகள் நாக்கில் வர வேண்டும். இந்த மனிதனின் பேச்சை யாரால் தாங்க முடியும்?

கல்யாணம் விசேஷம் என்று பத்து பேர் கூடினால் போதும். கேட்க ஆள் கிடைத்த குஷியில், அம்பானிக்கு பிஸினஸ் வராது என்பார், ரத்தன் டாடாவுக்கு மூளையே இல்லை என்பார். நாராயண மூர்த்திக்கு சாப்ட்வேர் எழுதத் தெரியாது என்றெல்லாம் விளாசி விடுவார்.

தெரிந்தவர்கள், கழண்டு கொள்வார்கள். தெரியாதவர்களின் மரைகள் கழண்டு போய்விடும்.

குழந்தைகள் மூவரும் வளர்ந்தோம். ஒவ்வொருவராக ஒரு மாதிரியாக கல்லூரியை எட்டிப்பிடித்தோம். அப்போதே பிடிக்க ஆரம்பித்தது சனியன்.

வீட்டில் பெரியம்மா மாமா சித்தி என்று நிறைய சொந்தங்கள் வந்து போவதுண்டு. அவர்கள் வீட்டில் திருமணம், அல்லது தெரிந்தவர் வீடுகளில் திருமணம் என்று வீட்டில் பேசிக்கொண்டால் நாங்கள் தொலைந்தோம்.

அப்பா ஆரம்பித்துவிடுவார். எனக்கு கல்யாணம் கார்த்திகை என்று செய்து வைக்க வசதி இல்லை. ஜாதி மதம் பார்க்காமல் நல்ல காசு வசதி உள்ள ஒருவனைத் தேடிப் பிடியுங்கள். அப்படியே அவன் கூட செட்டிலாகி விடுங்கள். வயது காலத்தில் எங்களையும் நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும் என்பார்.

நாங்கள் பள்ளிக்கூடத்தில் படிக்கும்வரை அப்பாவின் மேல் நிஜமாகவே கோபம் உண்டு. அப்பா மட்டும் ஏன் எல்லா அப்பாக்களையும் போல இல்லாமல் குழந்தைகளை வெறுக்கிறார், யாருடனாவது ஓடிப்போ என்கிறார்.

இப்போதெல்லாம் நாங்கள் மூவருமே அப்பா மீது கோபப் படுவது இல்லை. மாறாக அப்பா அம்மாவை நாங்கள் மகன் நிலையில் இருந்து வயதான காலத்தில் காப்பாற்றுவோம் என்று மூவரும்

பேசிக்கொள்ளுவோம்.

இப்போது நான் பி எஸ் சி (கெமிஸ்டிரி) மூணாம் வருடம். கலா, அடுத்த தங்கை பி காம் முதல் வருடம். மீனா, கடைசி தங்கை, இண்டர் முதல் வருடம்.

நண்பிகள் பலர் இருந்தாலும், சில மாணவிகள் எல்லோர் மத்தியிலும் மிகவும் டிமாண்ட். இவர்கள் சொல்வது உண்மையோ கற்பனையோ தெரியாது. ஆனால் சினிமாவில் வரும் கனவு காட்சிகளைத் தோற்கடிக்கும் வகையான அனுபவங்களை டன் டன்னாகச் சொல்வார்கள்.

அமெரிக்காவில் உள்ள அண்ணன் வீட்டிற்கு விடுமுறையில் பயணம் செய்தது. மால்களில் ஷாப்பிங், பனிசருக்கில் விளையாடியது, ஹாலிவுட், ஷிக்காகோ பயண அனுபவம் ... இவைகளுக்கு எல்லை இல்லையோ?

மூன்று சகோதரிகளும் தங்கள் கல்லூரி தோழிகள் சொல்லிய கதைகளைப் பகிர்ந்து கொள்வார்கள். மூவரும், ஏக மனதாக, பிடித்தால் அமெரிக்க மாப்பிள்ளை மட்டுமே என்ற முடிவுக்கு வந்தார்கள்.

இப்போதெல்லாம், படிப்பில் கவனத்தைவிட தங்கள் உறவினர், நண்பர்களின் உறவினர் வெளிநாட்டில் இருக்கிறார்கள் என்ற செய்திக்காக அலைந்தார்கள். பார்க்க நன்றாக இல்லையானாலும் சரி, ஜாதி, மதம் கூட பார்க்க வேண்டாம் என்று அப்பா சொல்லி விட்டாரே.

சினிமாக்களில் வருவதை முன் மாதிரியாகக் கொண்டு, காதல் வலையை பின்னி, எப்படி வருங்கால மாப்பிள்ளையைப் பிடிப்பது என்பதை இவர்கள் கிடைத்த நேரத்திலெல்லாம் கூடிப் பேசு வார்கள்.

முதலாமவளுக்கு, ஒருமாதிரியாக யுனிவர்சிடி பரிட்சை பாஸ் செய்த உடனேயே, கால் சென்டரில் வேலை கிடைத்தது. சம்பளத்தில், அவ்வப்போது தங்கைகளுக்கு டிசைன் டிசைனாக உடை மற்றும் பல அலங்கார ஐட்டங்களை சப்ளை செய்தாள்.

ரேவதி, தான் சினிமாவில் கற்றதை, உடன் வேலை செய்யும் சக ஆண் தொழிலாளர்களிடம் டெஸ்ட் செய்து விடுவாள். அது ஓர்க்

அவுட் ஆவதாகச் சொல்வாள்.

தன் வயது பையன்களையோ, அல்லது அதிக வயதுள்ள ஆண்களையோ, பேசும்போது அவர்கள் கையை அப்போது தொட்டுப் பேசினால் போதும். அதற்கே மயங்கி விழும் மாங்காய்கள் உண்டென தங்கைகளுக்கு பாடம் சொன்னாள்.

தனது அலுவலகத்தில் ஒரு மானேஜர், திருமணாமானவர், அவரைத் தன் பாக்கெட்டில் வைத்திருப்பதாகச் சொல்லுவாள். கல்யாணாமானவர்கள் பத்திரமானவர்கள். அவர்களிடமிருந்து கிடைத்ததை உருவிக்கொண்டு காற்றில் கரைந்து விடலாம் என்பாள்.

வயசுப் பையன்கள் ஆபத்தானவர்கள். புத்தியில்லாமல் நம்மை திரும்பத் திரும்பச் சுற்றி வந்து கல்யாணம் அது இது என்று தொந்தரவு செய்வார்கள் என்பாள்.

லீவு நாட்களில் காலையிலேயே காணாமல் போய் இருட்டிய பிறகுதான் வீடு திரும்புவாள். வரும்போதெல்லாம், புதிய துணி மணிகள், நகை செல்போன். என்று பண மழை தான். எல்லாம் விலை உயர்ந்தது.

இளைஞர்கள் ஒவ்வொருவராக வலையில் சிக்க, ஓரளவு மொட்டை அடித்த பின் அவர்கள் மீது மனது புண்படும் வகையாக ஏதாவது ஒரு பெரிய குற்றம் சுமத்தி கழட்டி விடுவாள்.

சிலரை வீட்டுக்கு கூட அழைத்து வந்ததுண்டு. அம்மா அப்பா இருவரும், ரேவதியையும், அவள் அழகு மற்றும் சாமர்த்தியம் எல்லாவற்றையும் புகழ்வார்கள். ஓசி ஐட்டங்கள் தான் அம்மா அப்பாவுக்கும் வருகிறதே. அவர் ஒரு ஓசிச் சக்கரவர்த்தி என்றே சொல்லலாம். செல்போன் போதாதென்று செல்போன் ரீசார்ஜ் கூட ஓசியில் கிடைக்காதா என்று ஏங்குவார்.

சில வருடங்களுக்குப் பிறகு, ஓரளவுக்கு, ரேவதி வேலை பார்க்கும் இடத்தில் அவள் புகழ் பரவ, அங்கிருந்து காலி செய்ய வேண்டிய கட்டாயம் வந்து இப்போது வீட்டில்தான் இருக்கிறாள்.

அடுத்த வேலை தேடக்கூட ஆரம்பிக்க வில்லை. இன்னமும் இரண்டு வருடம் . சம்பளம் இல்லாமல் ஆடம்பர வாழ்வுக்கு தேவையான பணம் கையில் இருக்கிறது. வேறு என்ன

வேண்டும்?

ஆனால், அம்மா அப்பாவோ, இவளை, விரைவில், ஒரு பணக்காரப் பையனை அல்லது வெளிநாட்டு மடையன் ஒருவனைப் பிடித்து வாழ்கையில் செட்டிலாகிவிட வற்புருத்தி வந்தார்கள்.

ரேவதி வயது மட்டுமில்லை, அவர்கள் வயதும் கூடி வருகிறதே! அவர்கள் வசதியாக வாழ எத்தனை கனவுகளை பல வருடங்களாக தாங்கிக் கொண்டிருக்கிறார்கள். பெரியவவள் தாமதித்தால், அடுத்த இரண்டு தங்கைகளுக்கும் வழி தெரியாமல் போகுமே என்ற பயமோ?

அக்காவை அப்பா அம்மா புகழ்வதில் தங்கைகள் இருவருக்கும் சிறிது பொறாமை உணர்வு உறுத்தினாலும், நாம் அதைவிடப் பெரிய பணக்கார பையன்களை வலையில் வீழ்த்துவதாக சபதம் எடுத்துக்கொண்டார்கள்.

ரேவதி படித்து முடித்து வேலைக்கு சேர்ந்த பிறகு செய்த பல சாகசச் செயல்களை அவள் தங்கைகள், கல்லூரி நாட்களிலேயே தொடங்கிவிட்டார்கள். ஜாதி மதம் மட்டுமல்ல, இனம் மொழி என்று எல்லாவற்றையும் தாண்டி தங்கள் விளையாட்டைக் காட்டினார்கள்.

சினிமா, ஏசி ரெஸட்டில ஓசி சாப்பாடு, மோட்டார் சைக்கிள் சவாரி ஆரம்பித்து கார் சவாரியாக வளர்ந்தது.

ரேவதியின் இரு தங்கைகள், எல்லைகள்ஐத்தாண்டி பலரை மொட்டையடித்து வந்தனர், கடைசியாக ஒரு வசதியுள்ள குடும்பத்தில் வெளிநாட்டில் வேலை பார்க்கும் ஒரு இளைஞன் மாட்டவே, சின்ன தங்கை பெரிய அக்காவை மிஞ்சிவிடத் துடி த்தாள்.

பல மாதங்கள் சுற்றிய பின், அக்காக்கள், அப்பா அம்மா எல்லோரும், இந்த பையனை மாப்பிள்ளையாக்க கடும் முயற்சி எடுத்தார்கள்.

இவர்கள் அறியாதது என்னவென்றால், என்றுமே, எப்போதுமே குற்றம் செய்பவர்கள் அவசரப்படுவார்கள். அவசரம் தவறுகளை செய்ய வழி செய்யும்.

தவறுகள் குற்றங்களை வெளிக் கொண்டுவரும்.

தன்னை அறியாமல், எத்தனை புத்திசாலித்தனம் உள்ள குற்றவாளியும் தவறாமல் சில தடயங்களை விட்டுச்செல்வதும், துப்பு தேடும் போலீஸ் அதிகாரிகளுக்கு கிடைக்கும் தடையங்கள் இந்த வகையைச் சார்ந்ததே!

ஒரே ஓருவர் மாத்திரம் குற்றத்தில் ஈடுபட்டால் கண்டு பிடிப்பது சிரமம்தான். அப்படியில்லாமல், எந்த குற்றத்திலும் பலர் ஈடுபட்டால், அவரவர் பங்கிற்கு ஒவ்வொருவரும், தங்கள் தடையங்களை விட்டுச்செல்வதால், தேடுபவருக்கு கண்டுபிடிப்பது மிகவும் எளிதாகிறது,

காதல் என்னும் போதை மிகவும் சக்திவாய்ந்தது. காதுவரை வந்த நல்ல அறிவுறைகள் மூளையில் சேரும் முன் ஆவியாகிக் காணாமல் போய்விடும்.

தந்தை தாயின் சொற்கள் எச்சரிக்கைகள் அவர்களையே காதலுக்கு எதிரிகளாக காட்டியது.

காதல், என்ற மாயை விரித்த, வலையில் சிக்கி வழி தவறிய இளைஞன் பணம், பொருளை மாத்திரம் இழந்ததோடு தப்பித்தேன் பிழைத்தேன் என்று அவர்கள் உறவைத் துண்டித்து ஒதுங்கினான்

காலப்போக்கில், தான் எப்படி ஒரு ஏமாளியாகயும் கோமாளியாகவும் சில காலம் வாழ்ந்து வந்ததை அவனால் நம்பவே முடியவில்லை.

இதோடு, இந்த கடைக்குட்டி மீனாவின் புகழ் வேகமாக பரவ, அவசர அவசரமாக ஒரு பையனை பிடித்து காதும் காதும் வைத்தாற்போல் என்பார்களே, அப்படி நடத்தி முடித்தார்கள். அதோடு, பெற்றோரின் ஒரு அமெரிக்கா கனவு கருகியது.

முதல் பெண், கால் செண்டர் கேர்ல், கிட்டத்தட்ட கால் கேர்லாகவே மாறி விட்டதாக கேள்வி.

இப்போதெல்லாம், அம்மா கல்யாணப் பேச்செடுத்தால், ஒரே ஒரு மனிதனுடன் மொத்த வாழ்நாளைக் கழிப்பது எனக்கு கடினம் என்கிறாள். அப்பா அம்மாவுக்கு, ரேவதியின் இந்த போக்கில் சிறிதும் உடன்பாடில்லை. முதல் கனவு கருகிதென்றால் இது அடுத்த கனவையும் அல்லவா கருக வைக்கிறது!.

இரண்டாமவள் கலாவுக்கு, தன் தங்கை எதிர்பார்த்த இலக்கை அடையாதது ஒரு அதிர்ச்சியைத் தந்துள்ளது. தனது கதி என்னவாகுமோ என்ற பயமோ?

தான் சுற்றிவந்து மொட்டை அடித்த ஒரு கிருக்கன் தன்னை கல்யாணம் செய்துகொள்ள கட்டாயப்படுத்தி வருகிறான். அவன் குடும்பமோ நம்ம குடும்பத்தைவிட அதிகமான தரித்திரம்.

என் வருமானத்தில் அவன் குடும்பத்தை நிறுத்தப் பார்க்கிறான். நான் நிலத்தின் அடியில் போனால், இவன் நிழலின் அடியிலேயே போகிறான் என்கிறாள்.

இப்போதெல்லாம், கலா அதிகம் வெளியில் போவதில்லை. தேடிவரும் நண்பர்களுக்கு, அவள் இப்போது வீட்டில் இல்லை என்று பதில் கொடுத்து அம்மாவுக்கு பழக்கமாகிவிட்டது.

அய்யோ பாவம், அப்பா அம்மா! இருவருமே, மகள்களுடன் ஒட்டிக்கொண்டு, அமெரிக்காவுக்கு போய், வெளிநாட்டு மாப்பிள்ளைகளின் டாலர் மழையில் நனைய, வசதியான வாழ்கையில் செட்டிலாகி வாழக் கனவுகள் கண்டார்கள்.

இன்று அது எல்லாமே பிசுபிசுத்து போனதை உணர்ந்தார்கள்.

இப்போதெல்லாம் பழையபடி அப்பா, மகள்கள் மேல் கோபமும் ஆத்திரமுமாக இருக்கிறார். இந்த பொட்டை கழுதைகளால் ஒரு உபயோகமும் இல்லை ............... அப்பாவின் தினப்படி திட்டு கள் இடை வெளியே இல்லாமல், தொடர்கின்றன.

இந்த மார்கெட்டிங் மஹாதேவன் குடும்பத்தில் என்ன கோளாறு? அடுத்ததாக அலசிடுவோம்.

## அலசல்

வாசகர்களுக்கு விளக்கம் தேவை இல்லாதவை:

பெற்றோர் மூன்றாம் தர ( கடைசி ) வகை மனிதர்கள்.

குந்தைகள் – தடம் மாறியவர்கள்.

பொதுவாக, வாழ்க்கையைப் புரிந்து கொள்ளாமல், பொருளைத் துரத்துவதே வாழ்க்கையின் ஒரே இலட்சியம் என்று மக்களில் பெரும் பகுதியினர் வாழ்கிறார்கள்.

குடும்ப அங்கத்தினர் அனைவரும் விரிவடையாத மனம் கொண்டவர்கள்.

பெற்றோரே குறுகிய சிந்தனையும் பேராசை கொண்டும் வாழ்ந்து வருவதன் பின் விளைவாக அவர்களின் ச்ந்ததியும் அவர்கள்ஐப் போலவே வழிதவறி வாழ்கிறார்கள்.

தன் தவறான வழியிலிந்து விலகி, நல்ல சிந்தனைகளை எவருமே உடனடி அடைவதில்லை. வெகு சிலரே, தவறுகளை உணர்ந்து, நல்ல வழியில் வாழத் தொடங்குகிறார்கள்.

நமது நாட்டில் கணக்கில்லாத மஹாதேவன்கள் இருக்கிறார்கள். இவர்களைத் திருத்தவே முடியாது.

வாழ்வதற்கு பொன் பொருள் தேடும் மனிதர்கள் இருக்கலாம். ஆனால், செல்வத்தைத் தேடுவதையே வாழ்க்கையாகக் கொண்ட மனிதர்களை என்ன சொல்ல?

## கதை . 7

## சுஷ்மா(க்கள்) படும் பாடு.



சுஷ்மாக்கள் படும்பாடு என்றால், சுஷ்மா என்ற பெயரை உடைய எல்லோருக்குமே, ஒரே வகையான பிரச்சனையா? இல்லவே இல்லை.

இந்த கதையின் கதாநாயகிதான் சுஷ்மா. அவளுக்கு சில தீர்க்க முடியாத பிரச்சனைகள் உண்டு ஆனால், அவளைப் போலவே, அதே பிரச்சனைகளின் வெவ்வேறு பரிமாணங்களைத் தலையில் சுமந்து கொண்டு அவதிப்படும் அனேக பெண்கள் இருக்கிறார்களே!

நாம் அடிப்படை பிரச்சனைக்கு தீர்வு கண்டால், நாட்டில் உள்ள எல்லா சுஷ்மாக்களும் மகிழ்ச்சி அடைவார்கள், இல்லையா?

இப்போது கதைக்கு போவோம் வாருங்கள்.

சுஷ்மா, உத்திரப் பிரதேசத்தைச் சேர்ந்தவள். சென்னையில் ஒரு ஐ டி கம்பெனியில் அவள் கணவனுக்கு வேலை. திருமணமாகி ஒரு வருடத்திற்கு மேலாகிவிட்டது.

மணமான புதிதில், ஒருமுறை, லக்னோவில் இருந்த கணவனின் வீட்டில் சுமார் பத்து நாள் தங்கி இருந்தாள். அப்போது எல்லோரும் பிரியமாகத்தான் இருந்தார்கள். அவ்வளவாக மாமியாரால் பெரிய பிரச்சனை வரும் என்று தோணவில்லை.

ஆறு மாதம் முன், மாமனாரும், மாமியாரும் சென்னையில் வந்து அவர்களுடன் இரண்டு வாரம் தங்கிச் சென்றார்கள். சுஷ்மாவைக் கேட்டால், அந்த அனுபவம் ஆயுளுக்கும் போதும் என்பாள்.

பெரியவர்கள் வருவதற்கு ஒரு வாரம் முன்பே, ராகுல், (அதுதான் சுஷ்மாவின் கணவனின் பெயர்), நான் பெரியவர்களிடம் எப்படிப் பேச வேண்டும், எப்படிப் பழகவேண்டும் என்று ஆரம்பித்து விட் டான். எனக்குத் தான் அவர்களை பழக்கம் உண்டே என்றாலும் விட்ட பாடில்லை.

அவர்கள் மனம் நோகாதபடி நடந்து கொள்ளவேண்டும். வருடத்திற்கு இரண்டு முறை வருவார்கள். அவர்கள் ஊர் திரும்பி, உன்னைப்பற்றி நன்றாக உறவினர்களிடம் பேசவேண்டும். இல்லை என்றால் பெண்டாட்டி பேச்சை கேட்பவன், இவன் பெண்டாட்டி நேரில்லை என்றெல்லாம் நமக்குக் கெட்ட பெயர் வரலாம்.

அதிகாலையில் குளித்துவிட்டு அவர்களை காலில் தொட்டு வணங்க வேண்டும். என்ன சமைக்க வேண்டும் என்று தினமும் அவர்களை கேட்டு அதன் படியே சமைக்க வேண்டும். அவர்கள், ஏதாவது ஏடாகூடமாக எதுவும் சொன்னாலும் எதிர்பேச்சு பேச க்கூடாது

அதாவது, வீட்டுக்கு வருபவர்கள் ஒரு திட்டத்தோடு வருவது போலவே பட்டது. இவ்வளவு பிரச்சனைகளும், (சசுரால்) மாமியார்– மாமனார் என்ற இரண்டு உருவத்தில் வரப்போகிறது. அவர்கள் வர பத்து நாள் இருக்கும்போதே, சுஷ்மாவைப் பயம் பற்றிக்கொண்டது. ஜுரம் கண்டது.

வைத்தியம் நடந்தது. கணவன், சுஷ்மா, வேண்டுமென்றே உடல் நலமில்லை என்று நடிப்பதாக சந்தேகப்பட்டான். மாமியார், வந்த உடன் அதே குற்றத்தை அவள் மேல் சுமத்தினாள்.

இடையில், சுஷ்மாவுக்கு சாதகமாக பேச முயன்ற அப்பாவி மாமனாருக்கு அரைமணி நேர அர்ச்சனை தொடர்ந்தது. இந்த விதமான அர்சனைகள் ஏதோ ஒரு காரணத்தைக் கொண்டு பெரியவர்கள் இருந்த அத்தனை நாட்களிலும் தொடர்ந்தது.

இவர்கள் அடுத்த இரண்டு நாட்களில் புறப்பட இருக்கிறார்கள் அப்போது சுஷ்மா குணமடைந்தாள் (பயம்தான் அவள் உடல் நலக்கேட்டிற்கு காரணமோ?). வீட்டு வேலைகளை வழக்கம் போல நன்றாகவே செய்தாள். கணவனின் விருப்பபடி அனை த்தயும் அந்த இரண்டு நாட்களில் செய்ய தீவிர முயற்சி செய்தாள். ஒன்றும் பயனில்லை.

கணவணிடம் என்னைப் பற்றி, எப்படியெல்லாம் குற்றமாக சொல்ல முடியுமோ – பாசாங்கு செய்பவள், சாகசக்காரி, திமிர்பிடித்தவள் – அத்தனையும் கொட்டினாள். அவன் பெற்றோர் ஊர் திரும்பி பல நாட்கள் கழிந்தும் கணவன், அவளிடம் சரியாக பேசக்கூட இல்லை.

ஒரு வருடம் சென்றது. மாமனார் காலமானார். ராகுலின் அம்மா இரண்டு பிள்ளைகளில் ஒன்றுடன் இனிமேல் தங்கவேணடும். ராகுலின் பெரிய அண்ணனின் மனைவி திட்டவட்டமாக சொல்லி விட்டாள். உங்க அம்மாவுடன் ஒருநாள் கூட என்னால் இருக்க முடியாது.

ஒன்று உங்கள் அம்மா, இல்லை நான். இருவரில் ஒருவரை நீங்கள் தேர்ந்தெடுக்கலாம் என்றாள். எதிர்பார்த்தபடி, அண்ணன் அண்ணிக்கு ஓட்டும், மாமியாருக்கு ஓட்டமும் கொடுத்தார்.

சுஷ்மாவுக்கு அவ்வளவு அதிருஷ்டம் இல்லை.

ராகுல் சுஷ்மாவை சம்மதம். கேட்கவில்லை. தனது அம்மா வரப்போகும் விஷயத்தை மட்டுமே சொன்னான்.

சுஷ்மாவும் தன் பாட்டி தாத்தாவுடன் வளர்ந்தவள். வீட்டில் பெரியவர்கள் இருப்பதை பாரமாக நினைக்காத ஒரு பண்பட்ட கலாசாரத்தில் வளர்ந்தவள்தான். ஆனால் அந்தப் பெரியவர்கள்,

பேயாட்டம் ஆடும் டைப் இல்லை.

பெரியவர்கள் இருவரும், குடும்பத்தில் நல்லது கெட்டது என்றும் தன் மகள் வீட்டுக்கும், மற்ற உறவினர் வீடுகளுக்கும் எப்போதாவது போவதுண்டு. அப்போது அவர்கள் இல்லாதது வீட்டிலுள்ள எல்லோருக்குமே வருத்தமாக இருக்கும்.

மற்றபடி, தினம், ஏதாவது பத்திரிக்கை படிப்பது, பூசை தோத்திரங்கள் சொல்வது என்று தான் இருக்கும் இடம் தெரியாமல் இருப்பார்கள். நிறைய நீதிக் கதைகள் ராமாயணம் என்று குந்தைகளுக்குச் சொல்லுவார்கள். அதுவும் எங்கள் படிப்புக்கு எந்தவித இடையூரும் இல்லாமல் பார்த்துக் கொள்வார்கள்.

குழந்தைகளுடன் அல்லது குடும்பத்துடன் நல்ல நாள், கிழமைகளில் பாட்டி தாத்தா தலைமையில் எல்லோருமாய் கோவிலுக்குப் போவோம். எங்களுக்கு தோத்திதங்கள் சொல்லித் தருவார்கள்.

ஆனால், இப்போது வரப்போவது என்னவோ மாமியார் இல்லை. மனித உருவத்தில், ஒரு பயங்கர ஜந்து. ராகுலுக்கு அம்மாவின் மேல் பாசம் அதிகம். ஆனாலும் இப்படியா?

ராகுலின் அம்மா ஒருமாதிரியாக வந்து சேர்ந்தாள். வந்ததிலிருந்து அண்ணனையும் அவன் மனைவியையும் திட்டி, சாபமிட ஆரம்பித்தவள், இன்றுவரை ஒயவில்லை. ராகுல் ஒன்றும் பதில் பேசமாட்டான். அது அவள் சுபாவம் என்பான்.

அடுத்து, என்னையும் ஜாடைமாடையாக ஏதேனும் சொல்லிக் கொண்டே இருப்பாள். எனக்கு சில சமயம் அழுகையும் வரும். நம் தலை எழுத்து அப்படி என்று சமாதானம் செய்து கொள்வாள். எப்போதாவது குழந்தைகள் பள்ளி விடுமுறையில் அம்மா வீட் டுக்கு போவதாக சொன்னால் முன்பெல்லாம் ராகுல் அனுப்பி வைப்பான் .

இப்போதெல்லாம் ஏதோதோ காரணம் சொல்லி தட்டிக் கழிக்கிறான். இந்த கிழவிக்கு வேளா வேளைக்கு உழைத்து போட்டு, மணி தவறாமல் திட்டுவாங்க ஒரு இளிச்சவாய் வேண்டாமா?

கிழவியின் உக்கிர தாண்டவத்திலிருந்தும் உபத்திரவத்தில் இருந்து சிறிது நாளாவது தப்பிக்கலாம் என்றால் அதற்கும் இந்த

கொடூர கிழவி சாகும் வரை சான்ஸே இல்லை.

ஆபீசிலிந்ருந்து வந்தவனிடம் ஏதோதோ பேசி கோள் மூட்டிவிடும் இந்தப் பிசாசு. ராகுலும் தலையை ஆட்டி கேட்டுக் கொண்டிருப்பான். இதன் விளைவு, வாரத்தில் ஓரிரண்டு நாளேனும் என்னிடம் முகம் கொடுத்து பேசுவதில்லை.

ராகுல் நல்ல மகனாக இருக்க விரும்புவதில் தப்பில்லை, அதே சமயம், நல்ல கணவனாகவும் இருக்க முயற்சி செய்யக் கூடாதா?. இதுதான் சுஷ்மாவின் ஆதங்கம்.

இவன் தன் அப்பாவைப் போலவே, அம்மாவின் ஆசிட் தோய்த்த நாக்குக்குப் பயந்து தொடை நடுங்கியாகவே வாழ்கையைக் கழிப்பானோ? தனக்கு விடிவு கிடைப்பது மாமியாரின் மரணத்துடன் இணைந்ததோ இதுதான் அவள் பயம்.

அலசல்

ஒருகூட்டுக்குடும்ப கலாச்சாரத்தில் வயதான காலத்தில் தாய் தந்தையரைக் கவனித்துக் கொள்வது பிள்ளைகளின் கடமை.

அதே போல, தன் புத்திரச் செல்வங்கள் அவர்கள் இளமையை இனிமையாகக் கழிக்க இடையூராக இல்லாமல் பார்த்துக்கொள்ளுவது புத்திரர்களின் பெற்றோரின் கடமை.

வயதானவர்களில், அடுத்த சந்ததியுடன் இரண்டர இணைந்து மகிழ்வுடன் வாழும் பெரியவர்கள், மிகச் சிலர், எப்போதுமே உண்டு.

தன் இளமைக் காலத்தில் தன்னை தன் மாமியார் துன்புருத்தியதால் தன் மருமகளை துன்பப்படுத்துவதை நியாயப்படுத்தும் மாமியார்களை அறிவோம். தன் மகன் மருமகள் மீது பற்றுதலுடன் பழகுவதை காணச்சகிக்காத மாயியார்கள், அதனால் மகன்—மருமகள் வாழ்வில் குறிக்கிட்டு அனைவரின் வாழ்கையையும் நரகமாக்கும் கதைகள் வீடுதோரும் உண்டு.

இளசுகளின் அமைதியைக் குலைத்து, தானும் அவர்கள் வெறுப்பைப் பெற்று – இந்தக் கிழவி எப்போது சாவாள் என்று ஏங்கி, அந்த நன்னாளை மருமகளை எதிர்பார்க்க வைப்பது என்ன புத்திசாலித்தனமோ?

மருமகளைத் துன்புறுத்தும் மாமனார்களும் நம் நாட்டில் உண்டென்றாலும், அப்படிப்பட்டவரின் எண்ணிக்கை மிக மிகக் குறைவு.

அதே சமயம், கட்டிய மனைவியை வில்லியாக உருவாகிய தாய்க்கு பலியாக்கி, பெற்றோருக்கும் ஊருக்கும் நல்ல பிள்ளையாக தோற்றம் அளிக்கும் கோமாளி மகன்களே அதிகம்.

உனக்கும் வேண்டாம் எனக்கும் வேண்டாம் என்று கட்டிய மனைவியுடன், திருமணமான மறுநாளே காணாமல் போகும் வித்தைக்கு, ராகுலின் அதிரடித் தாயாரைப் போன்ற மனிதர்களே முக்கிய காரணம்.

கூட்டணி அமைப்போம்

இன்றைய அரசியல் கட்சிகள் நாட்டிற்கு ஒரு நன்மையும் செய்யாவிட்டாலும் அமைதியான வாழ்கையை நடத்த ஒரு உதாரணமாக திகழ்கிறார்கள். அதுவே ஒரு கூட்டணி அரசியல்.

குறைந்த அளவில் ஒரு கணவன் – மனைவி கூட்டணி அமைக்கலாம். முடிந்தால் அல்லது கணவன் – மனைவி – பெற்றோர் என்று மூன்று பேரும் ஒரு கூட்டணி அமைக்கலாம்.

இன்றைய தலைமுறையில் காணும் அரசியல் கூட்டணியின் ஒரு குறைந்த அளவு திட்டம் – அல்லது அஜெண்டா – என்ன செய்யலாம்? எதை விட வேண்டும் என்று சில வாழ்க்கை விதிகளை முன்வைத்து, சுமுகமாக வாழ திட்டமிட்டால், இந்த பிரச்சனைக்கு விடை கிடைக்கும்.

இப்படி வாழ்வது நடை முறையில் சாத்தியம் இல்லை என்று பெரியவர்கள் அடம் பிடித்தால், அவர்கள் சத்தம் போடாமல் முதியோர் இல்லத்தைச் சரண் அடைந்து மீதிக் காலத்தைக் கழிப்பது எல்லோருக்குமே நல்லது.

அதே சமயம், இளசுகள் காரணமானால் என்றால், தனக்கும் இப்படி முதியோர் சரணாலயம் தேடும் காலம் வெகு தூரத்தில் இல்லை என்பதை நினைவில், திடமாக, இருத்திக் கொள்வது நல்லது.

இன்றய கால கட்டத்தில், பிள்ளைகள் ஏழு கடல்களைத் தாண்டி திரவியம் தேடச் செல்லும் வேளையில், பல பெற்றோர்கள், தனித்து

வாழப் பழகியும், அதையும் ஒரு உண்மையாக ஏற்றுக்கொள்ளத் தொடங்கிவிட்டார்கள்.

கீழே காணும் ஒரு ஆலோசனையை அனைவரும் பின்பற்றலாம்:

பெற்றோருடன் வாழாத தலை முறையும், பெற்றோருடன் வாழும் மகன்களும், இதை அனுசரிக்கலாம்.

தங்கள் வீட்டிலுள்ள பெரியோர் சிறியோர் என்று எல்லா நபர்களுடனும், அடிக்கடி ஏழைகள் வாழும் முதியோர் காப்பகங்களுக்கு குடும்பத்துடன் செல்லுங்கள். அந்த இல்லங்களில் வாழ்பவர்களுக்கு பிரியமான உணவை கேட்டறிந்து, அன்புடன் வினியோகிப்பதை ஒரு வழக்கமாகக் கொள்ளுங்கள். இது ஒரு நல்ல பலனைத் தரும். குடும்பத்தில் நிரந்தர அமைதியை வளர்க்க, உதவும்.

இப்படியும் பல அம்மாக்கள்

# கதை . 8

# மறை கழன்ற தாய்கள்



நண்பர் ஒருவர் மனநல மருத்துவத்தில் நிபுணர். அவர் சொல்லிய திடுக்கிடும் செய்தியை இப்போது கதையாகச் செ ால்லப் போகிறேன்.

அஷுதோஷ், பேரைக் கேட்டாலே சொல்லலாமே!, இவர் ஒரு வங்காளி என்று. இஞ்சினியரிங் படித்ததிலிருந்து தற்போது வேலை பார்ப்பது எல்லாமே சென்னையில் தான்.

புது தில்லியில் படித்து வளர்ந்த ஒரு வங்காளிப் பெண்ணை, வீட்டுப் பெரியவர்கள் தேர்ந்தெடுக்க, தான் மறு வார்த்தை எதுவும் சொல்லாமல் திருமணம் செய்து கொண்ட, ஒரு நல்ல பையன்.

அஷுதோஷின் அப்பா அம்மா, பிள்ளையுடன் சென்னைக்கு இடம்

பெயர மறுத்துவிட்டார்கள். கொல்கொத்தாவில் (பழய கல்கத்தா தான்) அவர்களுக்கு ஏகப்பட்ட உறவுக்காரர்கள். சென்னையோ புரியாத மொழி, ஒட்டமுடியாத கலாசாரம்.

வருடத்திற்கு ஒரு முறை குழந்தைகளுடன் கொல்கத்தா சென்று, 15 நாள் தங்கிவருவது அஷுதோஷுக்கு வழக்கமாகிவிட்டது. குறிப்பாக அஷுதோஷ், அம்மாவின் செல்லப்பிள்ளை. அம்மா சென்னைக்கு வராவிட்டாலும் தான் அம்மாவுடன் தங்கி, அம்மா கையால் சாப்பிட்டுவிட்டு வரலாம் என்ற நல்ல எண்ணம் தான் மனைவி குழந்தைகளுடன், இந்த வருட விடுமுறையிலும் கொல்கத்தாவுக்கு (க்ஷட்சிய்ச்ச்க்ஷ ஒது முறையாகப் போய்வரத் திட்டமிட்டான்.

ஏன் அப்படி?

இதற்கு முந்தய தடவை கொல்கொத்தாவிலிருந்து திரும்பியதும், மனைவி தீர்மானமாகச் சொல்லியிருந்தாள். வர வர உங்க அம்மாவின் பிடுங்கல் தாங்கவில்லை. இருக்கும் ஒரு சில நாட்களில் எப்போது ஊர் திரும்புவோம் என்று தோன்றுமாறு செய்கிறாள்.

நான் நல்ல மருமகளாக நடந்து கொள்ளவில்லையாம். பிள்ளைகளைச் சரியாக வளர்க்கவில்லையாம். நம்மைக் காண வரும் மற்றும் வந்து போகும் சொந்தக்காரர்களிடம் வண்டிவண்டியாகக் குறை சொல்கிறாள்.

எனக்கு, உங்கள் அம்மாவின் இந்த குமுறலை கேட்டவர்களின் பார்வையும் பதிலும் அருவருப்பாக இருக்கிறது. அடுத்த வருடத்திலிருந்து நீங்கள் குழந்தைகளுடன் சென்று வாருங்கள் என்றாள்.

ஓக்கே. ஓக்கே ... நான் அப்படி எதுவும் நடக்காதவாறு பார்த்துக் கொள்கிறேன் என்றான் அன்பான கணவன். அப்படி உன்னுடைய விடுமுறை வேதனை தருவதாக அமைந்தால், அடுத்த கொல்க்க த்தா பயணத்தில் நீ கட்டாயமாக இல்லை சரிதானே.

அஷுதோஷ் சொன்ன வாக்கை எப்போதுமே மீறுவதில்லை.

அம்மா கொஞ்சம் லொட லொடா டைப்தான். இருந்தாலும் என் மேல் உள்ள பிரியத்தினால், என் சொல்லைத் தட்டமாட்டாள் என்ற

நம்பிக்கை தானோ?

இந்த வருடமும் குடும்பத்தோடு அஷுதோஷ் கொல்கொத்தா போனான். கொல்கொத்தா போய் சேர்ந்த நாளிலிருந்து, முதன் முறையாக தன் அம்மா, மனைவியை எப்படி நடத்துகிறாள், என்ன பேசுகிறாள் என்றெல்லாம் என்று கவனித்து வந்தான். தன் அம்மா மனைவியை எவ்வளவு வெறுக்கிறாள் என்று தெரிகிறது.

அம்மா தனியாக இருக்கும்போது நல்லவிதமாக பேசிப் பார்த்தான். வருடத்தில் ஒரு பத்து நாள் வருகிறோம். அப்போது நாலு நல்ல வார்த்தைகள் பேசி, மருமகளுடன் நட்பாக இருக்க முயற்சி செய்யக் கூடாதா?

அம்மா, தன் மருமகள் மீது குற்றங்களை அடுக்கிக் கொண்டே போனாள். அவர்கள் காலத்தில் கூட்டுக் குடும்பத்தில் எப்படி யெல்லாம் மருமகள்கள் உழைத்தார்கள் என்று பட்டியலிட்டாள். இந்தக் காலத்தில் பெண்கள் எப்படியெல்லாம் சுகப்படுகிறார்கள் என்று பட்டியல் போட்டாள். மகனுக்கு புரிந்தது. இந்த வியாதி, பரம்பரையாக வருவது. பொறாமை. இதற்கு இனிப்பு மருந்து வேலைக்கு ஆகாது.

ஒரு கடைசி முயற்சியாக, ஒரே ஒரு முறை கசப்பு மருந்தை கொடுத்தாலென்ன? அஷுதோஷ், ஆரம்பித்தான்.

அம்மா, சும்மா கதை விடாதே! நான் சிறுவனாக இருந்தபோது என் பாட்டியை, அதாவது உன் மாமியாரை, எப்படியெல்லாம் பேசினாய், நடத்தினாய் என்பது மறந்துவிட்டதா?

அப்பாவிடம் பாட்டியைப்பற்றி எப்படியெல்லாம் பொய்யாகப் புகார் சொல்லித் திட்டுவாங்க வைத்திருக்கிறாய்.

ஒரு நாளவது, நம்மைவிட பெரியவர்கள் என்று தாத்தா பாட்டிக்கு மரியாதை தந்ததுண்டா?

ஒரு நாள், பல்லி விழுந்த சாம்பாரை பாட்டிக்கு ஊற்றிவிட்டு, பாட்டி சாகவில்லையே என்று கவலைப்பட்டாயே, மறந்து விட்டதா உனக்கு?அம்மாவுக்கு ஒரே அதிர்ச்சி. இவன் இதையெல்லாம் கவனித்தானா? இன்னமும் மனதில் தேக்கி வைத்திருக்கிறானே! அம்மா பதிலே பேசவில்லை. சென்னை திரும்பும் நாங் வரை வீடு அமைதியாகவே இருந்தது.

இதை எல்லாம் பார்த்து தன் அம்மா, இனிமேலும் மனைவியைக் குற்றம் சொல்லாமல் இருப்பாள் என்று நம்பினான்.

கணக்கில் எங்கோ தவறு ஏற்பட்டது.

இந்த முறை, வருட இறுதி பரிட்சைகளுக்கு சில மாதம் முன்னமே அஷுதோஷ் குடும்பத்துடன் கொல்கொத்தா பயணம் செய்ய நேர்ந்தது. காரணம் – அவன் அம்மா, திடீரென மரணமடைந்து விட்டாள்.

ஊருக்குப் போய்ச் சேர்ந்ததும் ஈமச்சடங்குகள் நடந்து முடிந்தன.

அம்மாவின் தங்கை, அதாவது சித்தி, அம்மாவுக்கு இடைப்பட்ட காலத்தில் என்ன நடந்ததென விவரித்தாள்.

சில மாதங்களாகவே அக்கா ஓயாமல் பேசும் பழக்கத்தை கைவிட் டாள். கோவில், பூஜை, விரதம் இது போன்ற நல்ல வழக்கம் அக்காவுக்கு சிறுவயதிலிருந்தே இருந்ததில்லை.

இப்போது முழு நேரமும் தோத்திரங்கள் படிப்பது, தினந்தோரும் இரு முறை கோவிலுக்கு படையெடுப்பு, ஏதாவது ஒரு காரணத்தை சொல்லி முழுப்பட்டினி, மெலிந்து வந்தவள், சரியாக நடக்கக்கூட முடியாத அளவு நலிந்து விட்டாள்.

பல மருத்துவ பரிசோதனைகள் எந்த காரணத்தையும் காட்டலில்லை. குடும்ப மருத்துவருக்கு என்ன நோய பீடிக்கப்பட்டு இப்படி மெலிந்தார் என்று எதுவும் பிடிபடாத நிலையில், தெரிந்த ஒரு மனோநல மருத்துவரைக்காண சிபாரிசு செய்தார்

பல மணி நேரம் அக்காவிடம் பேசிய பிறகு அவர் கண்டு பிடித்தது, குற்ற உணர்வு.

அந்த மருத்துவர் கூறியதாவது,

மகன்கள், தொல்லை தரும் தாயிடமிருந்து தன் மனைவியைப் பாதுகாக்காக, தாயின் கடந்த கால நிகழ்வுகளில் ஓரிரண்டு தவறை சுட்டிக் காட்டுவது பரவி வருகிறது. மறந்திருத தனது பழைய குற்றங்களை தன் புத்திர செல்வங்கள் அறிந்திருப்பது ஒரு அதிர்ச்சி. அடுத்ததாக ஒரு குற்ற உணர்வு. மூன்றாவதாக பயம். நாம் செய்த குற்றங்கள் எந்த விதத்தில் நமக்கு தீமை விளைவிக்குமோ என்ற திகில். இதனால், பல தாய்மார்கள் மன

நோய்க்கு உள்ளாகிறார்கள்.

அதன் பின்விளைவாக பட்டினி கிடந்து, இதுவரை அடியெடுத்து வைக்காத பக்தியில் முழுகி மடிகிறார்கள்.

இப்போது பல மகன்கள் மறை கழன்ற தாய்களுடன் மனநல மருத்துவர்களின் உதவியை நாடி அலைகிறார்கள்.

## அலசல்

அறிவு வளருவதற்காக, அந்தக்கால அம்மாக்களுக்குக் கிடைக்காத பல வழிகள் மற்றும் வசதிகள், இந்தக் கால இளைஞர் அனைவருக்கும், எத்தனையோ உள்ளன.

நம் எல்லோர் வாழ்க்கையிலும், நம்மை சுற்றி பெரியவர்கள் சிறுவர்கள், நம் காலத்தை ஒட்டியவர்கள் என்று எப்போதுமே இருப்பார்கள். இந்த மூன்று வகை உயிர்களும் வேகம், விவேகம் இரண்டிலும் பெரிதும் மாறுபடுவார்கள்.

அந்தந்த வயதிற்கு ஏற்றவாறு தன்னை மாற்றிக்கொண்டு வாழும் கலையை கற்று அறியவேண்டும். பிரச்சினைகளை பொறுமை, சகிப்புத் தன்மை ஆகிய இரண்டுடன் அணுகவேண்டும்.

ஒவ்வொருக்கும் தங்கள் விருப்பப்படி நடந்து கொள்ள சிறிது இடம் தரவேண்டும். இருகலான சட்ட திட்டங்கள் நடைமுறைகள் என்றுமே பயன் தந்ததில்லை..

வாழ்க்கையில் பிரச்சினைகள் உண்டாக்குவோரும், பிரச்சினைகளில் மாட்டிக்கொள்வோரும், அறிவில் குறைந்தவர் என்பதை உணர வேண்டும்.

இறைவனில் அல்லது இயற்கையில் படைப்பில், மிகச்சிலரே, அறிவு பெற்று நலமாக வாழ்ந்து வருவார்கள் என்பது ஒரு உண்மை.

இன்றைய இளைஞர்கள் ஒரு வருங்கால முதியவர்கள். தங்களை முதியவராக மனதால் கற்பனை செய்து இன்றைய முதியவர்களிடம் எப்படி நடந்து கொள்வது, பிற்கால இளைஞர்களுடன் எப்படி இணைந்து வாழ்வது என்று சிந்திப்பது அவசியம். சிந்தனைகள் பல வழிகளை காண்பிக்கும், திறவாத பல கதவுகளை திறக்கும்.

## இப்படியும் ஒரு அப்பா

# கதை 9

# கணக்கு வாத்தியார்.



என் கணக்கு வாத்தியார் ஒரு சிடுமூஞ்சி. அதோடு, ஒரு முன்கோபி. பல கணக்கு வாத்தியார்களை ஆராய்ந்ததில், உலகெங்கிலும், கணக்கு வாத்தியார்களே சற்று வித்தியாச மாகவும் முன் கோபக்காரர்களாகவே இருப்பார்களோ என்பது என் வெகுநாளைய சந்தேகம்.

மாணிக்கம் பிள்ளை. பிறந்து வளர்ந்தது தஞ்சாவூருக்கு அருகே ஒரு கிராமத்தில். மூன்று அண்ணன் தம்பிகள். மாணிக்கம் பிள்ளையின் அப்பா, சிறிது நிலம்—புலன், மாடுகள் என்று சிறிது சொத்துள்ள விவசாயி. அவசிய செலவுக்கு அவசியமான பணம் உண்டு. வளமையைத் தேடி விவசாயத்தை கைவிட அடுத்த தலைமுறையினர் தீர்மானித்து விட்டார்களோ!

பெரிய அண்ணன், ஒரு பெரிய தனியார் துறையில் வேலை. கிட் டத்தட்ட ஒரு கவர்மெண்ட் உத்யோகம் போலத்தான். பிரச்சினை இல்லாமல் வாழ்க்கையைத் தள்ளலாம்.

அடுத்தவன் சரியான மக்கு. படிப்பு சம்பந்தமாக எதுவுமே வராது. ஆனால் வேண்டாதது எல்லாமே வேகமாக வரும்.

மாணிக்கம் கடுமையான உழைப்பாளி. அப்பா உதவியுடன் பி எஸ் சி மற்றும் பி எட் படித்து கணக்கு வாத்தியாராக ஒரு தனியார் பள்ளியில் சேர்ந்தார். உண்மை, நியாயம் நேர்மை ஆகியவற்றில் மிகுந்த நம்பிக்கை கொண்டவர். இதன் அடிப்படையில் ஒரு முறை தலைமை ஆசிரியருடன் மோதியதால், வேலையை உடனடியாக இழந்தார்.

வீட்டிலிருந்தே, டியூஷன் வகுப்புகள் நடத்தினார். பள்ளிக் கூடத் தில் இவரது கண்டிப்பான தன்மையில் பயந்து இவரை வெறுத்த மாணவர்கள், இவரிடம் டியூஷன் படிக்க வந்தார்கள். நல்லா செ ால்லிக்கொடுப்பார். அதோடு தன் மாணவர்கள் அதிக மதிப்பெண் எடுத்து வாழ்வில் முன்னேற வேண்டும் என்பதில் கருத்தாக இருப்பதாக மாணவர்களின் பெற்றோர் புர்ந்து கொண்டார்கள். இப்போதும் இவரை ஊர்ப் பெரிய மனிதர்கள் அறிவார்கள். பையன் கணக்கில் வீக் என்றால், முதலில் மாணிக்கம் பிள்ளைதான் நினைவுக்கு வருவார்.

ஒரு மாதிரியான ஆள், பிழைக்கத் தெரியாதவர். ஆனால் இவரிடம்

படித்தால் நிச்சயம் அதிக மார்க் வாங்கலாம் என்று ஒரு பெயர் சம்பாதித்துவிட்டார்.

கல்லூரி நாட்களில் கூடப்படித்த ஒருவனுக்கு பங்களூரில் உள்ள பெல் என்ற பொதுத்துறையில் வேலை. டியூஷனுக்கு பங்களூரில் நல்ல டிமாண்ட் என்று அவன்தான் பிள்ளையை அழைத்து வந்தான். அன்று கணக்கு (டியூஷன்) வாத்தியாராக பங்களூர் வந்தவர் வாழ்வில் எத்தனை மாற்றங்கள்?

பங்களூர் வந்ததும் காலையிலும், மாலையிலும் ட்யூஷன் என்றும், பகலில் முழுநேர முதுகலைப் படிப்பைக் கல்லூரியிலும் தொடர்ந்தார். இவர் கல்லுரியில் விரிவுரையாளராக சேர்ந்து, பிறகு கணிதப் பேராசிரியராகவும் ஆகிவிட்டார். ஆனால் எல்லோருக்கும், அன்றும், இன்றும் என்றும் – மாணிக்கம்பிள்ளை கராரான கணக்கு வாத்தியார்தான்.

மாணவர்களுக்கு இவர் மீது மரியாதைக்கு குறைவில்லை ஆனாலும் பயம் அதிகம். டியூஷன் மாணவர் மட்டுமல்லாது, எல்லா மாணவர்களையும் வகுப்பின் தனித் தனியாக கவனித்து வருவார். இந்த கராரான கணக்கு வாத்தியார் ஒழுக்கமும் உழைப்பும் மனிதருக்கு அவசியம் என்று வலிவுருத்துவார். தவறினால் தண்டனைகள் தப்பாது.

இவருடைய கல்லூரி மாணவன் ஒருவன் தன் வாழ்க்கையில் நிகழ்ந்ததாக விவரித்த ஒரு சம்பவம்.

பி எஸ் ஸி இரண்டாம் ஆண்டு மாணவர் ஒரு வறுமையான குடும்பத்தைச் சேர்ந்தவர். அவன் அப்பா மாணிக்கம் பிள்ளையைப் பார்த்து, தன் மகனைப்பற்றியும் அவர் காணும் கனவுகளையும், அதனால் அவர் படும் பாட்டையும் தெரிவித்தார்.

தினமும், அந்த மாணவனின் முன்னேற்றத்தைக் கண் காணிக்க ஆரம்பித்தார். டெஸ்ட், பரிட்சைகளில் தொண்ணூறு % மார்க்குக்கு குறைந்தால் திட்டி விழும். இந்த மாணவருக்கு மாணவிகள் பார்த்திருக்க வகுப்பறையில் அடியே விழுந்திருக்கு. அதில் மனம் உடைந்து போனார் மாணவர்.

அடி விழுந்ததும் ஒரு நன்மைக்குத்தான். அன்றய தினத்திலிருந்து, ஒரு விரதம். இனிமேலும் அவமானத்திற்கு உள்ளாகக் கூடாது

என்ற விரதம். அதன்படி, ஒரு முறைகூட வாத்தியாரிடம் அடியோ திட்டோ வாங்கவே இல்லை. விளைவு, யுனிவர்சிட்டி ராங்க், ரயில்வேயில் வேலைவாய்ப்பு.

பிற்காலத்தில் வாத்தியாரின் போட்டோ ஒன்றைப் பெற்று பெரியதாக்கி தனது வீட்டின் முன் அறையில் வைத்திருப்பதாக்கக் கேள்வி. தனக்கு, மெரிட் மூலம் அரசாங்க வேலை கிடை த்ததற்கு கணக்கு வாத்தியாரின் அடிதான் காரணம் என்றும் நம்புகிறானாம். இப்போது நாற்பது வயப்பதுதைத் தாண்டினாலும் மாணிக்கம்பிள்ளையின் முன்னால் வரப் பயமாம்.

மாணிக்கம் பிள்ளை சிறந்த கணக்கு வாத்தியாரானாலும் தன் பிள்ளை குட்டிகளிட்ம் அவர் கணக்கு தப்பியதாகவே தெந்தவர்கள் சொல்கிறார்கள். கணக்கு வாத்தியார் தன் வாரிசுகளை படிக்க வைத்துப் பட்டதாரிகளாக்கியதோடு நில்லாமல் நல்ல வேலைகளில் அமர்த்தும்வரை ஓயவில்லை. ஆனாலும் தந்தையை பிள்ளை குட்டிகள் எல்லோருமே ஒரு முரட்டுக் கணக்கு வாத்தியாரகவே பார்த்தார்கள்.

இன்று மாணிக்கம் பிள்ளை இறந்துவிட்டார். செய்தி கிடைத்து பல பழைய மாணவர்கள் கூடிவிட்டார்கள். செய்தி கிடைத்து சொந்த பந்தங்கள் யார் யார் வருவாரோ தெரியாது.

வாத்தியாரின் பெண் – மருமகன் – பிள்ளைகள் – பேரன் – பேத்திகள் என்று பலர் கூடியிந்தாலும் அவர்களில் யாரையுமே மாணிக்கம் பிள்ளையின் மறைவு பாதித்ததாகத் தெரியவில்லை.

தனது மனைவியின் மறைவிற்குப் பிறகு தனியாகவே காலத்தைத் தள்ளிய கணக்கு வாத்தியார், விட்டுச்சென்ற சொத்தை எப்படிப் பிரித்துக்கொள்ளுவது என்று சொந்தங்கள் ஒருவர் குடுமியை மற்றவர் பிடித்தவாறு இருந்தனர். நேரம் நகர்ந்ததே தவிர சொந்தங்கள் சிறிது கூட நகருவதாகத் தெரியவில்லை.

காத்திருந்து தோற்றுப் போய், கூடியிருந்த பழைய மாணவர்கள் வாத்தியாருக்கு இறுதிச் சடங்கிலிருந்து, தொடங்கி கடைசியாக தகனம் வரை செய்வித்து வீடு திரும்பினார்கள்.

மாணிக்கம் பிள்ளை வாழ்வில் ஜெயித்தாரா தோற்றாரா?

## ஒரு அலசல்:

(1) பொன்னும் பொருள் இருந்தும், உருப்பெறாத சந்ததிகளை உருவாக்கி விட்டுச் செல்லும் செல்வந்தர்களை விட இந்த ஏழை கணக்கு வாத்தியச்சார் உயர்ந்து நிற்கிறச்ஞூர். கடும் உழைப்பில், இந்தக் கணக்கு வாத்தியார், தன் சந்ததியை தன்னைவிட உயந்த நிலைக்கு கொண்டு வந்ததுவிட்டார், அதுவே அவர் அடைந்த மிகப்பெரிய வெற்றி. முதர் வகைத் தந்தை.

பெற்று வளர்த்து வாழ்வில் சீரும் சிறப்பும் மிகுந்து வாழ வழி செய்த தந்தையை அனாதரவாக விட்ட போதும், பல மாணவர்கள் அவருடைய கடும் உழைப்பும், கண்டிப்பும் தங்கள் முன்னேற்றத்திற்குக் காரணம் என்று உணர்ந்து நன்றி பாராட்டுவதோடு அவருக்கு, முதிய வயதில் உறுதுணையாக இந்தார்கள் என்பது மகிழ்ச்சி தரும் செய்தி..

மனித செயல்பாடுகளில் சில மருத்துவ தத்துவங்களைக் காணலாம். அலோபதி மருந்துகள் வலிகளிலிந்து விடுதலை தரும், சில சமயம். சில வியாதிகளைக் குணம் செய்யும். அதோடு சில உபவிளைவுகளையும் தரும்.

வலி நிவாரணி – அசீரணத்தைத் தவறாது தரும்

கொலஸ்ட்ரோல் என்ற உபாதையைக் குணம் செய்யும் மருந்துகள் தவறாது கிட்னியைத் தாக்கும்.

இதை சைட் எபெக்ட் அல்லது உப விளைவு எனலாம்.

(2) அவரை தன் சொந்த வாழ்வில் தோற்றவராக கொள்வோர் அனேகம். இந்தப் பிரச்சனையை புரிந்து கொள்ளுவது எளிது. மாணவரிடம் காண்பித்த அதே கண்டிப்பும் கண்காணிப்பும் பிள்ளைகளிடம் காட்டியிருப்பார்.

தன் குழந்தைகளிடம், அவர்கள் நலனைத் தவிர வேறு எதுவும் எதிர்பார்க்காத முதல் தரத் தந்தை இவர்.

பிள்ளை குட்டிகள், தன் தந்தையிடம் அன்பும் அரவணைப்பும் எதிர்பார்த்து அது கிடைக்காததால் ஏமார்ந்திருப்பார்கள்.

அதே சமயம் பெண்டாட்டி பிள்ளைகளை அனாதரவாக விட்டுவிட்டுக் காணாமல் போகும் தந்தைகளை, குடித்துவிட்டு மனைவி

குழந்தைகளை அடித்து நொருக்கும் தந்தைகளை, குந்தைகளை உழைக்க வைத்து அதில் கும்மாளமிட்டு வாழும் தந்தைகளை – இவர்கள் அனைவரையும் கணக்கு வாத்தியார் போன்ற கண்டிப்பான தந்தைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து, தந்தையை தண்டிப்பதா அல்லது ஆதரிப்பதா என்று பிள்ளைகள் முடிவு செய்வது அவசியம்.

பிள்ளைகள் தாங்களே பெற்றோரான பிறகு, சிறிதளவு அறிவும் முதிற்சியும் இருந்திருந்தால், தந்தையை தவிர்த்து வாழ்ந்திருக்க வாய்ப்பில்லை.

அவர்கள், தங்கள் தன்தையிடம், எதிர்பார்த்துக் கிடைக்காத அன்பும் அரவணைப்பும் அடுத்த சந்ததிக்கு கட்டாயம் கிடைத்திருக்கும்.

ஆனால் தன் பிள்ளைகள் நலமாகவும் வளமாகவும், வழி தவறாமலும் வாழ வழி செய்த தந்தைக்கு எவரும் என்றும் நிகராவதில்லை.

சாட்சி – அடுத்த சந்ததியில், தடம் மாறித் தவிக்கும், கணக்கு வாதியாரின் சில பேரப்பிள்ளைகள். அது, பெற்றோர்கள் அதிக அளவில் (தனக்குக் கிடைடுக்காத) அன்பும், அளவில்லாத சு தந்திரத்தையும் பிள்ளைகளுக்கு அள்ளித் தந்ததன் எதிரொலி.

உலகம் உள்ளவரை ஒரு ஊருக்கு சில கணக்கு வாத்தியார்கள் இருப்பது தப்பாது. அவர்கள் குழன்தைகளும் இவர்களை வெறுப்பதும் தவறாது.

ஆன்மிக சிந்தனை – அதாவது நமது என்பது எதுவும் இல்லை – நான் எனது இரண்டுமே மாயை என்பது மனதின் கண்முன்னால் அகல்லாத்து இருக்குமேயானால், கணக்கு வாத்தியார்கள்ஐ துன்பம் துரத்தாது.

சில மனைவிகள்

# கதை ௯

# ஆபீஸர் மனைவி



பலருக்குச் சொல்லியிருக்கிறேன். கதையை கேட்ட சிலர் கண்ணீர் கூட விட்டிருக்கிறார்கள். மனோகரன் விவரிததது, அப்படியே, கீழே கதை தொடர்கிறது,

இந்த கதையில் வந்த ஒரு போலீஸ் அதிகாரி, இன்றய தேதியில் ரிட்டயராகி 8 அல்லது பத்து வருடங்கள் ஓடியிருக்கும். அவ்வளவு பழைய கதை. ஆனால் இன்றும் என்றும் நாட்டின் ஏதோ ஒரு மூலையில் இதே சாயலில் வேறு ஒரு குடும்பம் நடந்துவரும்.

நான் திருமணமாகி புது மனைவியுடனும் குடித்தனம் செய்யும் கால கட்டம். எங்களோடு சில காலம் தங்க விரும்பிய என் அம்மா. மூவரும் ஒரு சின்ன வீட்டில் ஒரு சின்ன குடித்தனம் அமைத்துக் கொண்டோம்.

தன் அம்மாவை அவர் மாமியார் படுத்திய அளவு, இந்த காலமாக இருந்தால், அந்த பொல்லாத மாமியாருக்கு மரண தண்டனையே கிடைத்திருக்கும். ஆனால் பட்டும் கூட, என் அம்மாவுக்கு தன் பொல்லாத மாமியார் ரோலை எப்படி செய்வது என்று கூடச் சரியாக தெரிந்து கொள்ளாத அளவு, ஒரு அப்பாவி.

இந்த அப்பாவி மாமியின் பொழுது போக்கிற்காக அந்த எட்டு வீட்டுக் குடியிருப்பிலுள்ள (என் அம்மாவின்) சம வயதான மாமிகளுக்கு அறிமுகப்படுத்தி, அம்மாமி லீக் – பங்களாதேஷில் அவாமி லீக் போல ஒரு அமைப்பு ஏற்படுத்தி, கோவில் குளம், சினிமா போய்வர காசும் தனியாக கொடுத்து பார்த்துக்கொண்டேன்.

மலையாள நாட்டில், வீடுகள் சம தரையில் இருக்காது, இல்லையா? அந்த ஊரில், நாங்கள் குடியிருந்த கிருஷ்ணா காம்பௌண்டில். எட்டு குடும்பங்கள் உண்டு.

எங்க வீட்டு ஜன்னலிருந்து பார்த்தால், பள்ளத்தில். ஒரு சில பங்களாக்கள் தெரியும். அங்கே,ஒரு பங்களாவின் பின் கட்டில் – அதாவது, வீட்டின் பின்புரம் ஒரு வயதான அம்மா, மனோகரனின் அம்மாவைவிட ஆறு ஏழு வருடங்கள் அதிகமாக இருக்கலாம். அதோடு. அந்த அம்மாவின் கணவர் இருவரையும் நாங்கள் காண்போம்,

அந்த வீட்டிற்கு ஒரு போலீஸ ஜீப் அடிக்கடி வரும். முப்பது

வயதுக்குள் ஒரு வாலிபன், ஒரு டி எஸ் பி (உயர் போலீஸ் ) அதிகாரி, அவனையும் அவன் மனைவியையும் அந்த பங்களாவில் காணலாம்.

அந்த கணவன் மனைவி ஜோடி பெரியவர்களை சமையலுக்கும், வீட்டை பார்த்துக்கொள்ள உதவிக்காகவும் வேலைக்கு அமர்த்தி இருக்கிறார்கள் போலும்.

திடீரென்று ஒரு நாள் மாலை. மனோகரன் ஆபிசிலிருந்து திரும்பிய உடன், அந்த வயதான அம்மாள், தயக்கத்தோடு வாச லில் நின்று கொண்டிருந்தாள். எந்த மொழியில் பேசுவது என்ற தலையை சொரிந்து கொண்டு நின்றபோதும், மலயாளம்— தமிழ் இரண்டும் கலந்த தமிழில், நான் உங்களுடன் சற்று அவசரமாகப் பேசவேண்டும் என்றாள்.

உள்ளே வரச்சொல்லி நாற்காலியில் உட்காரசொன்னால், சிறிது தயங்கிய பிறகு தரையில் உட்கார்ந்தாள். பிறகு அருவி கொட் டுவது போல அடுத்த பத்து நிமிடங்கள் கொட்டித் தீர்த்தாள். அதன் சுருக்கம் இதுதான்.

முதலில் பல நாட்களாக இவரை ஒரு சமையல் மாமி என்று நாங்கள் போட்ட கணக்கு பெரிய தவறு என்பது தெளிவாகியது . மாமியின பெயர், ராஜம், கணவர் கணபதி.

போலீஸ் ஆபீசரை பெற்று வளர்த்து படிக்க வைத்து ஆளாக்கிய, தாய்—தந்தை.

இளமையில், ராஜம் — கணபதி இருவருடைய பெற்றோரை பிடித்த வறுமை, இவர்களையும் பிடித்தது மட்டுமில்லாமல், இன்றுவரை விடவில்லை.

இன்றய ராஜம்மாள், சுமார் பதினெட்டு வயதில் அடுத்துள்ள வீடுகளின் தயவால் வாழ்ந்துவந்தாள். கல்யாணம், போன்ற விசே ஷங்களுக்கு ஊர்ப் பெரிய மனிதர்களின் வீடுகளில் சமைப்பது என்று தன் வாழ்கையைத் தொடங்கி, மணியய்யர் ஒட்டலில், (கிரைண்டர் கண்டுபிடிக்காத காலத்தில்) மனித கிரைண்டராக வேலைக்கு சேர்ந்தார்.

அதே கால கட்டத்தில், டேபிள் கிளீனராக சேர்ந்து, சர்வராக உயர்ந்த கணபதியின் மீது மையல் கொண்ட இந்த தையல், ராஜம்

என்ற ராஜம்மாள், எளியதான ஒரு கோவிலில் தானே நடத்திய திருமணத்தில் கணபதியின் மனைவியானார்.

ஏழைகளில் இந்த தம்பதி ஒரு வித்யானமானவர்கள். பொதுவாக ஏழைகள் பிள்ளைகளே செல்வம் என்று நினைத்து, வருடம் ஒன்று என்று பல செல்வங்களை உருவாக்குவதுண்டு. வாழ்க்கைப் பளு தாங்காமல், அவர்களை பிஞ்சுப் பருவத்தில் வேலை பார்க்க அனுப்பிவிடுவார்கள்.

ஏழைகள் பரம்பரை பரம்பரையாக உருவாவதுஎப்படி? சிறு வயதில், முறையான கல்வி இல்லாமல் இவர்கள் குறைந்த வருமானத்தோடு வாழ்கையை தொடங்கிடுவார்கள். வறுமையில் வளர்ந்து, பற்றாக்குறையில் வாழ்ந்து அடுத்த சந்ததியையும் அவர்களைப் போலவே ஏழையாக உருவாக்கி விடுகிறார்கள் இல்லையா?

இந்த நியதிக்கு ராஜம்மாள்– கணபதி தம்பதி, முற்றிலும் ஒரு விதிவிலக்கு. ஒரே ஒரு மகனை பெற்றெடுத்து, சீரும் செல்வமுமாக வளர்த்து உயர்ந்த கல்வி தந்து, சமூகத்தில் மரியாதையும், அந்தஸ்தையும் பெரும் அளவுக்கு கல்வி தருவதாக முடிவு செய்தார்கள்.

இன்று, அவர்கள் கனவு ஒரு நினைவாகி நிற்கிறது. அவர்கள் குமாரன், ஒரே பிள்ளை. ஒரு உயர் போலீஸ் அதிகாரி.இவன் உருவாக்கும் சந்ததிகள் உழைத்து ஓடாகாது. ஐந்துக்கும் பத்துக்கும் பிறரைக் கையேந்தி நிற்காது. இந்த ஏழை தம்பதிகளின் கனவு, சுமார் 25 வருட ஓயாத உழைப்பு, தியாகம் எதுவுமே வீண்போகவில்லை. இது போன்ற வெற்றி எத்தனை பெற்றொருக்குச் சாதியமாகும்?

இந்த ஏழைத் தம்பதிகள் வாழ்வில்லே மகன் போலீஸ் அதிகாரியாகி, எண்ணி மூன்று வருடங்களில் எத்தனை மாற்றங்கள்?

அவள் தாற்காலிகமாக சமையல் வேலை செய்த வீடுகள் உள்பட எத்தனையோ வசதியுள்ள குடும்பத்தினர் ராஜம்மாவின் சிறிய ஒரு ரூம் வீட்டைச் சுற்றி வந்தார்கள். எதற்கு? தங்கள் மகளை ராஜம்ம்மாவின் மருமகளாக்கத்தான்.

ராஜம்மா, கடைசியாக தேர்ந்தெடுத்தது, ஒரு வியாபாரத்தில் ஈடுபட்டு செல்வம் கொழிக்கும் குடும்பத்தைச் சேர்ந்த பட்டதாரிப் பெண் ஒருத்தியை.

அதோடு, அவள் கண்ட கனவுகள் அவ்வளவும் நிஜமானது மட்டுமில்லை முடிவுக்கும் வந்தது. இன்று கடவுள் அவள் வீட் டுக்கு வந்து, கதைத் தட்டினால் கூட திறக்கமாட்டாள்.

மகன் திருமணமான ஒரு சில வாரங்கள் தான் கழிந்திருக்கும். போலீஸ் அதிகாரியின் தாய்–தந்தையாக. ஒரு மரியாதைக்குரிய மாமியார் – மாமனார் என்ற உறவில் மகனோடும் மருமகளோடும் நடத்திய வாழ்க்கை கிட்டத்தட்ட ஒரு முடிவுக்கு வந்துவிட்டது

அதை அடுத்து, மருமகளின் நண்பர்கள், சொந்த பந்தங்கள் வரவு அதிகமானது. நவநாகரிகம், பெரிய மனித தோற்றம் நுனிநாக்கில் ஆங்கிலம் பேசும் திறமை எதுவும் இல்லாத தம்பதி, மருமகளுக்கு இடைஞ்சலாக இருந்ததோ!,

வருவோர் போவோரிடம், இந்த பெரியவர்கள் வீட்டுச் சமையல் காரர்களாகவே மருமாளால் அறிமுகம் செய்யப்பட்டார்கள்.

அப்போதிலிருந்து இந்த பெரியவர்களுக்கு, வீடடில், சமையல் அறையும், வீட்டின் பின்கட்டும் தான் அனுமதிக்கப்பட்ட இடங்கள்.

அது மட்டுமல்ல, நாட்கள் வளர, வெகு நேரம் கழித்து வரும் மகனுடன் பேசும் வாய்ப்பும் போய்விட்டது. இப்படியும் ஒரு காலம் வரலாம் என்று இவர்கள் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள் இல்லையா?

இதுவரை நூறு தடவையானும் மருமகள், பெரியவர்களிடம், சொல்லிவிட்டாள். ‘என் கணவனின் பெற்றோராக உங்களை பார்க்கவே எனக்கு அருவருப்பாக இருக்கிறது. சில லட்சம் ரூபாய்கள் என் அப்பாவிடமிருந்து வாங்கித் தருகிறேன். எடுத்துக் கொண்டு கண் காணாமல் போய்விடுங்கள்‘.

தாயின் பதிலோ, எங்களுக்கு பணம் காசு எதுவுமே வேண்டாம். மகனை ஒரே ஒரு தடவை மாத்திரம் பார்த்து, பத்து நிமிடம் பேசிவிட்டு பிறகு யார் கண்ணிலும் காணாமல் போய்விட நாங்கள்

தயார். வறுமை எங்களுக்கு புதியதல்ல.

இழப்பதற்கு பயப்பட, பணக்கார வாழ்கையை நாங்கள் பழகிடவும் இல்லை. இன்றுவரை நாங்கள் சமையலுடன் ஒட்டி வாழ்ந்தவர்கள். அது எங்களுக்கு எப்போதும் சோறுபோடும்....

மனோகரனுக்கு ஓரே குழப்பம். ஆமாம், இதை எல்லாம், இந்த அம்மாள், எங்கள் வீட்டுக்கு வந்து என்னிடம் ஏன் சொல்ல வேண்டும்?

மனோகரன் மனதில் தோன்றிய கேள்விக்கு அந்த அம்மாளே பதிலும் சொன்னாள்.

உன் அம்மா ஒரு வெகுளி. உலகம் தெரியாதவள் என்பதை சுமார் 200 அடிக்கு அப்பாலிருந்தே உணர்ந்தவள் நான்.

இப்போதெல்லாம் உன் அம்மாவை அடுத்த வீட்டில் உள்ள ஒரு வயதானவள், தவறான வழியில் செல்ல அறிவுருத்துகிறாள். மருமகளையும் மகனையும் பிரிக்க வேண்டும், இல்லாவிட்டால் உன்பாடு திண்டாடமாகிவிடும் என்றெல்லாம் உபதேசிக்கிறாள்.

உன் தாயாருடன் பேசிப்பார்த்தேன். அடுத்த வீட்டுக்காரியின் ச கவாசத்தை விடச்சொன்னேன். அவளுக்கு எதுவும் புரிந்ததாகத் தெரியவில்லை.

உன் குடும்பத்தில் குழப்பம் உண்டாக்க முயற்சி செய்கிறாள். எனறோ ஒரு நாள் குழப்பம் வரும் முன்னால் உன்னை எச்சரிக்கை செய்ய விரும்பினேன்.

அதுவும் முக்கியமாக, ஒரே ஒரு நாள் மாத்திரம், என் மகன் உன்னைப்போலவே, மனைவியுடனும் தாய்–தந்தைடனும், சிரித்து சந்தோஷமாகப் பேசி, நடந்து கொண்டால் போதும். நாங்கள் அன்றே உயிரைக்கூட விட்டுவிடத் தயார்.

மனோகரன் முகத்தில், மீண்டும் ஒரு கேள்விக்குறி.

தினம், நீ அலுவலகத்திலிருந்து வந்தவுடன் உன் அம்மா, மனைவி இருவரையும் பக்கத்தில் உட்கார வைத்து, ஆபீஸில், போகும் வழியில், நண்பர்கள் மத்தியில் நடந்த சுவையான பல விஷயங்களைச் சொல்வதும், மூவரும் சிரிக்கும் சத்தம் எங்கள் வீடுவரை வந்து சேரும்.

எப்படி நீ, முந்தைய சந்ததியையும், தற்கால மக்களான மனைவியையும் இணைத்து, அணைத்துச் செல்கிறாய் என்று எனக்கு அதிசயமாகத் தோன்றும். எல்லா மகன்களும் உன்னைப் போலவே இருக்ககூடாதா என்ற எண்ணம் எல்லாம் என் மனதில் எழும்.

மனதில் உன்னை என் மகனாகவும், என்னை உன் தாயின் இடத்திலும் மனதில் கற்பனை செய்து பார்த்து மகிழ்வதுண்டு.

அந்த நல்ல பையன் வீட்டில் குழப்பம் வரலாமா? இந்த எண்ணம் என்னை இங்கே கொண்டுவந்தது என்று முடித்தாள்.

காபி, பழங்கள் தந்து அன்புடன் பேசி, அந்த நல்ல இதயம் கொண்ட தாயை, மனோகரன் அனுப்பி வைத்தான்.

இந்த சம்பவத்தில்தான் எத்தனை படிப்பினைகள்.

## அலசல்

வாசகர்களே ! நீங்களே சொல்வீர்கள் – இந்த பெற்றோர், மிக உன்னத மானவர்கள்.

அவ்வை சொன்னார், கொடிது கொடிது இளமைவயில் வறுமை என்று. அதன் விளைவு இந்த பெற்றோரை தாக்கியதால், மகனுக்கு மிக செல்வந்தர் குடும்பத்தில் மகனுக்கு மனைவி தேடினாள் போலும்!

தவறு நடந்தது அங்கே தான்.

தன்னைவிட ஏழ்மை அல்லது சம நிலையில் உள்ள குடும்பத்தில் பெண் எடுத்திருந்தால், அந்த குடும்பம் தங்கள் வறுமையிலிருந்து தப்பி விட்டு இருக்கும்.

அப்போது கூட இவர்கள் நிலைமை நன்றாக இருக்கும் என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. மருமகள், மாமியாரை விரட்ட பிறந்த வீட்டு செல்வம் மட்டுமே காரணமில்லை. அதிக அளவு பிறந்த வீட்டில் தாண்டவமாடும் தரித்திரமும் ஒரு முக்கிய காரணமாக அமையும்.

மகனை ஒரு முறையேனும், கண்டு, பேசி, பிறகு உயிருள்ளவரை காணாமல் போய்விடத் தீர்மானித்து, வறுமையை மீண்டும் தழுவத்

தயாராகிய இந்த முதியவர்களின் துணிச்சல் மற்றும் பிள்ளையின் மீது வைத்த பாசத்திற்காக, அவர்கள் பாதங்களை, மானசீகரமாக, விழுந்து வணங்குகிறேன்.

மகனை குற்றம் சொல்வதிற்கில்லை.

தாய்—தந்தையின் கனவுகள் எல்லாவற்றையும் நனவாக்கினான். தவறிப்போனது பெற்றோரின் கணக்கு தான்.

திடீரென கிடைத்த புதிய சமூக அந்தஸ்த்தில் தடுமாறி, பழக்கமில்லாத பின்னணியுள்ள பெண்ணுடன் மண வாழ்வின் முழுகி, ஆழம் தெரியாத வாழ்க்கை என்னும் காட்டாற்றின் வேகத்தில் தன்னையும் தன் பந்தங்களையும் இழப்பது பெரும்பாலும், ஆண்மகன்களே.

## கதை ௭.

## தன் வினை சுட்ட காயங்கள்.



விலாசினி, மகேஸ்வரி, சுபாஷினி மூவரும் பள்ளிகூட நாட்களில் தொடங்கி இன்றுவரையில் நண்பிகள். எல்லோரும் சுமார் 30 வருடம் முன்னால் திருமணமானவர்கள். இவர்கள் மூவருக்கும் ஒரு ஒற்றுமை. தங்கள் திருமணமான சில மாதங்களில், தங்கள் மாமியார், மாமனார் இருவரையும், வீட்டிலிந்து வெற்றிகரமாக வெளியேற்றியவர்கள்.

விலாசினி, தன் கணவனிடம் சொன்னாள், ‘உங்கள் அம்மாவின் வயதான தோற்றம் என்னை தினம் தினம் பயம் கொள்ளச் செய்கிறது. நானும், ஒருநாள் இப்படி தோற்றத்தை அடைவேனே என்ற பயம் என் தூக்கத்தைக் கெடுக்கிறது‘.

கணவன் மோகனுக்கு, தன் அம்மாவை (இப்படி எல்லாம் நடக்கும் என்று எதிர்பார்த்தோ என்னவோ, காலாகாலத்தில் அப்பா காலமாகிவிட்டார்) மற்ற உடன் பிறப்புகளுடன் பெர்மனெண்டாக பிணைத்துவிட, இந்த ஒரு புகாரே போதுமாக இருந்தது.

மகேஸ்வரிக்கு அவ்வளவு அதிருஷ்டம் இல்லை. சில நாட்கள் கணவனுடன் போர் செய்யவேண்டி வந்தது. கணவனின் வயதான பெற்றோரின் மேல் பல குற்றங்களை பலமுறை சுமத்திப் பார்த்தாள். சொல்லாததையும் பொல்லாததையும் வீசி வந்தாள்.

ஒரே மகனான விசுவுக்குப் பெற்றோரின் மீது அன்பும் பரிவும் இல்லாமலில்லை. புது மனைவியின் வெறுப்பையும் சமாளித்தாக வேண்டுமே. என்ன செய்வது என்று அறியாது திணறினான். ஒரு நாள், நிலமையைப் புரிந்து கொண்ட விசுவின் பெற்றோர், வயதான ஜோடி இருவருமே, கட்டின துணியுடன் காணாமல் போனார்கள். இப்படி மகேஸ்வரி ஜெயித்தாள்.

சுபாஷிணியின் கதை மிக நீண்டது.

திருமணமான தினமே தன் கணவனைச் சேர்ந்த இரண்டு பெரிசு களையும் இடம் பெயர்க்கும் முயற்சிகளைத் தொடங்கினாள். சுபாஷிணியின் கணவன் ராமநாதனுக்கு ஒரு சகோதரி உண்டு. அவர்களிடம் தன் மாமனார் மாமியாரை அனுப்பிவிட கணவனிடம் சிபாரிசு செய்தாள். பயனில்லை.

சில நாட்கள் தாய் வீடு சென்று, அங்கே சில மாதங்கள் தங்கினாள்.

ராமநாதனின் பெற்றோர், கணவன் வீட்டிலிருந்து இடம் பெயரும் வரை திரும்புவதில்லை என்று அடம்பிடித்தாள்.

ராமநாதன் கண்டு கொள்ளவில்லை.

மாமியார்— மாமனார் மீது, வரதட்சினைக் கொடுமைகள் செய்வதாக வழக்கு தொடுப்போம் என்று சுபாஷிணியின் குடும்பமே மிரட்டியது. இங்கே ராமனாதன் ஒடிந்தான்.

போலீஸ் கோர்ட், பத்திரிக்கை என்று தொடரவிருக்கும் பிரச்ச னைகளில் மாட்டிக் கொள்ள பயந்தான் ராமநாதன். சகோதரி, தன் பெற்றோருக்கு அடைக்கலம் தர முன்வரவே, பெற்றோரை அவளிடம் கழட்டிவிட்டாவன்.

மகன் தன் மனைவிக்கு தெரியாமல் பெற்றோரை காண்பது உண்டாம். அவர்கள் செலவுக்கும் பணம் தருவானாம். எப்படியோ, பிற்காலத்தில் தனது மனசாட்சி உறுத்த இடம் தரவில்லை.

இந்தக் காலத்தில் கணவன் வீட்டிலுள்ள வயதான பெரியவர்களை கழட்டிவிட புது மணப்பெண்கள் புதுப்புது யுத்திகளை கண்டுபிடித்து வெற்றி காண்கிறார்கள். அதோடு, தனது பெற்றோரையும் பாக்கேஜ் டீலாக கணவன் வீட்டிற்கு கொண்டுவரும் கமலா, விமலா, சரளா ஆகியோருக்கும் குறைவில்லை.

காலம் மாறி வருகிறது. இவர்கள் ஒவ்வொருவரும் ஒரே ஒரு புத்திரனைப் பெற்றெடுத்தார்கள். அன்போடு வளர்த்தார்கள். போற்றி வளர்த்தார்கள். பிள்ளைகள் வளர, பிள்ளைகளின் அம்மாக்களின் பயமும் வளர்ந்தது.

பிள்ளைகள் தங்கள் திருமணம் முடிந்த பிறகு, மனைவியுடன் தனியாகப் போக, நாம் முதிய வயதில், ஆதரவு இல்லாமல் தனித்து வாழவேண்டி வருமே என்ற பயம் தான்.

இப்போதெல்லாம், அமேரிக்காவில் தங்கி, படித்து வேலைபார்த்து வந்த பிள்ளைகள், அமெரிக்காவின் தனி மனித சமுதாயத்தின் சிறப்பை போற்றி பேசுகிறார்கள்.

விலாசினி, மகேஸ்வரி, சுபாஷினி எல்லோருக்குமே புரிந்தது.

தங்கள் பிள்ளைகளிடமிருந்து வருடத்திற்கு ஒருமுறை, அம்மாக்கள் தினத்தன்று ஒரு வாழ்த்து அட்டைக்கு மேல் எதுவும் எதிர் பார்ப்பதில் பயன் இல்லை ! என்ற, பேருண்மையை.

சில இல்லத் தலைவலிகள்

# கதை 11.

# கற்பகம் எப்பவும் அப்படித்தான்

அப்படித்தான் என்றால் எப்படி?

கற்பகம், ஒரு மருமகளாக, ராசாத்தி அம்மாள் வீட்டில் காலடி வைத்த போதும் சரி, ஸ்ரீமதி, சுகன்யா என்ற இரு மருமகள்கள் தன் வீட்டில் காலடி வைத்த பின்னும் சரி சிறிதும் மாறவில்லை. எப்பொழுதும் போல அப்படியே இருக்கிறாள்

கற்பகம் ஒரு சுந்திரப் பறவை என்பார்களே, அந்த ரகம். அவளை கணவன் கதிரவன் மிகவும் விரும்பித் திருமணம் செய்து கொண்டான். அதனால்தானோ என்னவோ, திருமணம் முடிந்த ஆரம்ப காலத்தில் கொடுத்த சுந்திரத்தை எப்போழுதும் திரும்பப் பெறவில்லை. அதைக் கற்பகம் கெட்டியாக பிடித்துக் கொண்டாள். இப்போதெல்லாம் எவ்வளவு முயற்சி செய்தும் கதிரவனைக் கற்பகம் கண்டு கொள்வதில்லை

இன்று, கதிரவன் மிகவும் மனது உடைந்த மனிதன். தன்னைத் தானே நெந்து கொள்வதைத் தவிர கதிரவனுக்கு வேறு வழி

தெரியவில்லை

பல வருடங்கள், கதிரவனின் பெற்றோர் சொந்தக் கிராமத்திலே தனியாகவே வாழ்ந்திந்தார்கள். தந்தையின் மறைவுக்குப் பிறகும் ராசாத்தி அம்மாள் பல வருடங்கள் தனியாக கிராமத்திலே இந்தாள். கண்பார்வை குறைந்ததோடு இல்லாமல், படிப்படியாக காது கேட்பது வெகுவாக பாதிக்கப்பட்டது. கதிரேசன் தன்னுடன் வந்து தங்கும்பதி பலமுறை அழைத்தும் வருவதற்கு மறுத்து வந்தாள் ராசாத்தி. ராசாத்திக்கு ஒரே பயம். அவள் கணிப்பில், மருமகள் கற்பகம் கணவன் சொல்லை கண்டு கொள்வதில்லை. இருக்கும் வரை நிம்மதியாக நாட்களை தள்ளிவிடனும். யார் தயவிலும் இருப்பது சரியாகாது என்பாள்.

இப்போது கை–கால் இரண்டுமே ஓய்ந்துவிட்டது. கிராமத்தில் தன் வீட்டை அடுத்துள்ளவர்கள் உதவியில் உயிரை உடலுடன் ஒரு மாதிரியாக ஓட்டி, கட்டி வைத்திருந்தாள்.

கதிருக்கு தன் தாயின் மேலுள்ள அக்கரை ஒரு காரணமாகவும், ஊர்க்காரர்கள் மத்தியில் கெட்ட பெயர் வரும் சூழ்நிலையும் சேர்ந்து மனைவியின் சம்மதைத்தைப் பெறாமல் தாயை வலுக்கட்டாயமாக தன்னுடன் அழைத்து வந்தான்.

கதிரேசன் எதிர்பார்த்தது போலவே, அவர்களின் சிறிய வீட்டுக்குள்ளே, சுனாமி, நில அதிர்வு, எரிமலை வெடிப்பது என்று மூன்றும் ஒரே சமயத்தில் நிகழ்ந்தது போல அனைவரும் உணர்ந்தார்கள்.

இதன் பின் விளைவு வரப்போகும் காலம் ஆபத்துகள் நிறைந்தது என்ற பேருண்மையை அன்றே ராசாத்திக்கு உணர்த்திவிட்டது.

கற்பகத்திற்கு பல நண்பிகள். உள்ளூர்ப் பெரிய மனிதர்களின் மனைவிமார்கள். அவ்வப்போது நண்பிகள் அவர்கள் வீட்டிற்கு வருகை தந்து மணிக்கணக்காக அரட்டை அடிப்பது வழக்கம். பதில் மரியாதையாக கற்பகம் எல்லா நாட்களிலும், அலங்காரம் செய்து கொண்டு ஷாப்பிங், நண்பிகள் வீட்டில் அரட்டை என்று கிளம்பிவிடுவாள். ராசாத்திக்கு அதில் எந்த ஆட்சேபமும் இல்லை. மகிழ்ச்சிதான்.

ஆனால் ராசாதியால் பசிதாங்க முடியாது. அவளால் சமைத்து

உண்ணும் திரனும் இல்லை. பட்டணத்தில் அல்லசலில் (கிராமத்தில் இருப்பது போல) உதவி செய்வோரும் இல்லை.

ஒருநாள் கணவன் அலுவலகத்திற்கு புறப்பட்ட சில நிமிடங்களில் வெளியே போன கற்பகம் வீடு திரும்பியபோது இருட்டிவிட்டது.

ராசத்திக்கு பசி தாங்கும் எல்லையைத் தாண்டியிந்தாள். பிள்ளைகள் படிப்பு வேலை என்று காலையிலேயே கிளம்பிவிட்டார்கள்

மங்கலான பார்வை. ஒத்துழைக்காத கை கால்களின் உதவியால் சோறு சமைக்கத் தொடங்கினாள்.

மாலையில் வீடு திரும்பிய மருமகளுக்கு, சமையல் அறையில் மயங்கி மல்லந்து கிடந்த மாமியாரைக் கண்டு கோபம் கொப்பளித்தது. சுற்றியிலும் இறைந்துகிடந்த அரிசி தண்ணீர், உருண்டு கிடந்த பாத்திரங்கள் முழுக்கதையையும் சொல்லியது.

கணவனும் பிள்ளைகளும் தடுக்க கிழவியை தன் கை வலிக்கும்வரை அடித்தாள். ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்ட ராசாத்தி நேரடியாக சுடுகாட்டை அடைந்தாள்.

கதிர் கலங்கினான், கதறினான். காலம் கடந்து விட்டது. போனது திரும்பாது. வந்தது போகாது. இயந்திரமாக மாறி தன் எஞ்சிய கடமைகளை முடிந்தவரை செய்து வந்தான்.

இப்போது மருமகள் இருவர், ஒருத்தி பின்னால் ஒருத்தி வந்துவிட்டார்கள். தனக்கும் தன் மாமியார் கதி வந்துவிடுமோ!

கற்பகம் அந்த நிலைக்குத் தள்ளப்படமாட்டாள். தன் மாமியாரைப் போல அடங்கிக் கிடக்க மாட்டாள். மருமகள் இருவரையும் தன் கைக்குள் அடக்கி வைப்பாள்.

ஆனால் இன்று கற்பகத்தின் இரு பிள்ளைகளும் தன் மனைவியுடன் தனியாகவே வாழ்கிறார்கள். கற்பகம் ஆடிய ஆட்டத்தில், மிரண்டு போயிருந்த மகன்களே எடுத்த முடிவு இது.

கற்பகம், தனிமரமாகவே வாழ்க்கையைத் தொடருவாள்.

தான் கற்பகத்தை காலாகாலத்தில் நல்லவழியில் திருப்பாததால் தோன்றிய ஒரு குற்ற உணர்வினால், தவறாமல், கணவன் அவளைத் தவறாமல் தொடருவான்.

## அலசல்:

மொத்ததில் மனித வாழ்வில், குடும்பத் தலைவன் ஒரு ரயில் எஞ்சின் மாதிரிதான் வாழவேண்டும்.

அதிக தூரம் செல்லும் வகை குறைந்த தூரம் செல்லும் சிலர், ஓசிப்பாஸ், இரண்டாம் வகுப்பு, முதல் வகுப்பு, ஏசி கிளாஸ் என்ற பல வித பாசஞ்சர்களை சேர்த்துக்கொண்டு பத்திரமாக இழுத்துக் கொண்டு செல்லவேண்டும் நிர்ணயித்த்த இலக்கு வரை செல்ல வேண்டும்.

நாம் செய்யாத பயணமா? ரயிலின் உள்ளிலும் வெளியிலும் எத்தனை பிரச்சனைகள். ஆனாலும் பயணங்கள் நிற்பதில்லை.

பயணிகள் அவரவர்கள் தனக்கு ஒதுக்கப்பட்ட இருக்கையில் அமர்ந்து மற்றவருடன், சுமுகமாகவும், தமக்குள் சண்டையிடாமல் அவரவர் இறங்கும் இடம் வரையில் செய்யும் பயணம், இனிதாக இருக்கும். அதிகமும் தகராறு செய்யும் பயணிகள் வழியில் இறக்கப்படுவதும் உண்டு.

இரயில் பயணத்திற்கும், வாழ்க்கைப் பயணத்திற்கும் பெரியதாக வேறுபாடு இல்லைதான். இதை தெளிவாக தெரிந்து கொள்ளத் தவறிய குடும்பத் தலைவன் குற்ற உணர்ச்சிக்கு அடிமையாகிறான்.

முக்கியமாக கவனிக்க வேண்தியது – தலைவன் தவறியதால், தலைவனும், தலைவனைச் சேந்தவர்களும் பூமியிலேயே நரகத்தை உணருகிறார்கள்.

இப்படியும் சில கணவர்கள்

# கதை 12.
# எஞ்சினியர் ராஜா, ஒரு மாதிரி

மைத்திலியின் கல்யாணம், மதுரைய்யில், ஒரு பெரிய கல்யாண மண்டபத்தில் தடபுடலாக நடந்தது. மைதிலி, அவள் அண்ணன் கணேஷ், அவள் அப்பா அம்மா, மாப்பிள்ளை மாமியார் மாமனார் எல்லோருமே வேலையில் உள்ளவர்கள். கேட்க வேண்டுமா கூட் டத்திற்கு.?

நமது சம்பிரதாயப்படி எப்படியானாலும் கல்யாணச் செலவெல்லாம் பெண்வீட்டு மனிதர்கள் தானே ஏற்றாக வேண்டும்! பெண் வீட்டார் நிறையவே, விமரிசையாக, பணத்தை தண்ணீராக செலவழித்து ஜாம் ஜாம் என்று கல்யாணம் நடந்ததினார்கள்,

மாப்பிள்ளைப் பையன், ராஜா ஒரு கலகலப்பான ஆசாமிதான். மைதிலியுடன் வேலை பார்த்த ஒரு சாப்ட்வேர் இஞ்சினியர். இப்போதெல்லாம் வீட்டுக்கொரு சாப்ட்வேர் இஞ்சினியர் அதுவும் மல்டி நாஷணல் கம்பெனியில் வேலையில் இருப்பது தவறாது. வெளிநாட்டில் வேலை பார்க்கும் பிள்ளைகளை அதுத்தடுத்து ஐந்து வீட்டில் தேடினால், அதுவும் ஏதாவது ஒரு வீட்டிலே சிக்கும்.

கல்யாணம் முடிந்து ஹைதராத்துக்கு மைதிலி பயணமானாள். உடன் வந்த மாமியார் மாமனார் புதியதாக வாடகைக்கு ஏற்பாடாயிந்த வீட்டிற்கு புதிய டீ வி பிரிட்ஜ் வாஷின் மெஷின், ஏர்க்கண்டிஷணர் எல்லாமே வாங்கி, உபயோகிக்கத் தயார்

நிலையில் வைத்திருந்தார்கள். மைதிலி தன் பார்த்து வந்த வேலையை ஏற்கனவே விட்டு விட்டாள்.

தனது வீட்டில் இருந்த அதே வசதிகள் புதிய வீட்டிலும் இருந்தன.

மைதிலியின் அப்பா அம்மா. இவர்கள்ஐ வரவேற்க இந்த வீட்டுக்கு வந்திந்தார்கள்.

ராஜாவின் அப்பாவுக்கு மத்திய அரசாங்க குவார்ட்டர்ஸ் ஒன்று உண்டு. போதாதற்கு சொந்தமாக பெரிய பிளாட் ஒன்றும் உண்டு. சீக்கிரம் ரிடையராகி விடுவார். கலகலப்பாகப் பேசுவார்.

ரிடையரான பிறகும் மேலும் இரண்டு வருடங்கள் அரசாங்கத்திலே கன்சல்டண்ட் என்று நீடிக்க வாய்பு உள்ளதாகவும், பிறகு தனியார் துறையில் வேலை செய்ய முடிவு செய்திருப்பதாகவும் அவர் மைத்திலியின் அப்பாவிடம் சொல்லியிருக்கிறார்.

ராஜா மைதிலியுடன் தேனிலவுக்கு வெனிஸ் செல்ல திட்டமிட்டு அதை மைதிலி கேட்டபோது மகிழ்சியின் எல்லையைக் கடந்திந்தாள்.

வெளிநாடு செல்ல இன்னும் இரண்டுநாள் இருக்கையில், ராஜாவின் அப்பா அம்மா பங்களூரிலிருந்து, ஹைதராபாத் வந்து சேர்ந்தார்கள். நாம் வெளிநாடு போயிருக்கும் போது வீட்டைப் பார்த்துக் கொள்ளத் திட்டமாயிருக்கும் என்று நினைத்தாள்.

புறப்பட இன்னமும் மணிகளே உள்ளபோதுதான் அவர்களும் ராஜா—மைதிலியை தொடரும் திட்டத்தை உணந்தாள்.

அதிந்து போயிந்த மைதிலிக்கு ராஜா விளக்கினான். தனது அப்பா அம்மா காலத்தில் வெளிநாடு சுற்றுலா என்ற எண்ணங்கள் கூட மனதில் எழுவதற்கு சான்ஸ் இல்லை. அவர்களால் தனியாக எங்கும் போக உள்ளூர உதரல் உண்டு. காசி யத்திரையைக்கூட இவர்கள் தனியாக ரயில் ஏறிப்பொனதில்லை.

அவர்கள் வாழ்க்கையில் இதை விட்டால் வேறு ஒரு சந்தர்ப்பம் கிடைக்காது ........

முதியவர்கள் நிழலாய்த் தொடர, ஒரு மாதிரியாக தேனிலவு முடிந்தது.

அதை அடுத்து, இரண்டு வாரத்திற்கு ஒருமுறை தவறாமல்

வந்துவிட்டு மூன்று நாட்களில் திரும்பிடுவார்கள்.

மைதிலியை அதிரவைத்த அடுத்த செய்தி, வி ஆர் எஸ் மூலம் முன்கூட்டியே ரிடயராவதற்கு தன் கணவனின் தந்தை முடிவு செய்துள்ளாராம்.

ராஜா இந்த செய்தியை சொன்னதோடு, தன் அப்பாவுக்கு பங்களூரிலேயே தனியார் துறையில் ஒரு நல்ல வேலை கிடைத்திருக்கலாம் என்றும் சொன்னான்

இதை அடுத்து ராஜாவின் பெற்றோர் விரைவிலேயே குவாட்டர்சை காலி செய்துகொண்டு ஹைதராபாதுக்கே வரலாமென்று ராஜா தெரிவித்த ஒரு செய்தி, நிஜமானது.

அவ்வப்போது தன் தந்தைக்கு இந்த செய்திகளைத் தெரிவிப்பாள், அப்பாவோ எல்லாம் நல்லதற்கே என்பார்.

மாமியார் மாமனார் சேர கூட்டுக் குடித்தனம் தொடங்கியது. அப்பா சொன்னார். எந்த சூழ்னிலைகளிலும் ஒரு கஷ்டத்தோடு ஒரு சுகம் இணைந்திருக்கும். அதைத் தேடிப்பிடி என்பார். பிறக்கப் போகும் குழந்தைகளுக்கு தாத்தா பாட்டி உடனிருந்து கதைகள் பல சொல்லி சீராட்டி வளர்த்தால் அதுவும் நல்லதுதானே!

இதுவரை எப்போதும் சிரித்துப் பேசும் ராஜா இப்போதெல்லாம் எரிந்து விழுகிறான். இப்போது, முதன் முதலாக மாமனார் மாயியாரை ஆராயத் தலைப்பட்டாள்.

இந்த மனிதர் ஒரு திட்டத்தோடுதான் செயல் படுகிறார்.

ராஜாவுக்கு எதிலிலெல்லாம் கோபம்வரும் என்று தெரிந்து, பொய்யைச் சேர்த்து கோள் மூட்டுகிறார்கள்.

அப்பாவோ, கொஞ்ச காலம் பல்லைக் கடித்துடுக்கொள் என்கிறார். எல்லாம் சரியாகிவிடும் என்கிறார்,

இப்போது அவசரகாரணமாக வெளியூருக்கு போக வேண்டி வந்தால் இருவரும் போவதில்லை. ஒருவர் மட்டுமே போயவ்வளவு சீக்கிரம் வரமுடியுமோ அவ்வளவு சீக்கிறம் திரும்பிடுவார்கள்.

பெற்றொருக்கோ, தனக்கிருப்பது ஒரே மகன் என்பதால், மனைவி பக்கம் ஓரேயடியாய் சேர்ந்து தன்னைக் கழட்டி விடுவானோ என்ற

பயம். தனையனுக்கோ, எவ்வளவு வருடங்கள் இருப்பார்களோ தனக்காக எவ்வளவு தியாகங்கள் செய்திருக்கிறார்கள்.அவர்கள் உயிருடனிருக்கும் வரை அவர்கள் மனம் மகிழ வைப்போம் என்ற எண்ணம்.

## அலசல்:

எச்சரிக்கை: இப்போதெல்லாம் இரண்டு பிள்ளைகள் (மகன் –மகள் அல்லது மகன் –மகன்) இல்லாத குடும்பத்தில் திருமண சம்பந்தம் செய்து கொள்ள பலர் பயப்படக் காரணம் புரிகிறதா।।

முதியவர்கள், நமது வாழும்காலத்தின் இறுதிக்கு வந்து விட்டோம். பிள்ளை குட்டிகள் மகிழ்ச்சியாக வாழட்டும் என்று விடுவதில்லை.

சிறுசுகளை நிழல்போலத் தொடர்ந்து, முடிந்தவரை அவர்களுக்கு இடயூறாக வாழ்வது எதற்காக? தெரியாத ஒரு எதிர்காலத்தில் தேவைப்படலாம் ஒரு உதவிக்காகத் தானே.

பெரியவர்கள் இப்படிச் செய்யும் சில செயல்கள், இளம் தலைமுறையைப் பாதிக்கலாம். எப்படி? எதிர்காலத்தில், உதவி தேவைப்பதும் போது, வராமல் செய்ய உறவில் ஒரு பெரிய ஓட்டை ஒன்றை உண்டாகும் என்று அறிவதில்லை.

## நண்பர்கள்
## நட்பைப் பற்றி ஒரு நீண்ட ஆராய்ச்சி

இது கற்பனைக் கதை இல்லை, பயங்கரமான உண்மை

நண்பர்கள் என்ற மாயை உருவாக்கிய பொய்யை புராண இதிகாச காலத்தில் துவங்கி சங்ககாலத்திலும் நுழைந்து, பலர் பாடுபட்டு இன்றுவரை வளர்த்து வருகிறார்கள்.

நட்பு, அதன் சிறப்பு இரண்டையும் வளர்க்கத் திரைப்படங்கள் தான் எத்தனை? கதைகள், கவிதைகள் தான் எத்தனை எத்தனை ?

சமீப காலத்தில் நட்பைப் பற்றி, என்னைவிட அவதிப்பட்டவர்களோ அல்லது அதிகம் ஆராய்ச்சி செய்த யாருமே இருந்ததாகத் தெரியவில்லை.

நண்பர்கள் என்பதற்கு மக்கள் தரும் ஒரு விரிவான விளக்கத்தைப் பார்ப்போம்.

உயிர்காப்பான் தோழன்

கொலையும் செய்வாள் பத்தினி.

கொலை செய்யும் பத்தினிகளைப் பற்றிய செய்திகள் நிறை யவே உண்டு. ஆனால் வாழ்க்கையில் கணவனின் உயிர் காத்த பத்தினிகளுக்கும் குறைவில்லை. ஆனால் உயிர் காத்த தோழர்களைவிட உயிரை எடுத்த தோழர்களே அதிகம்,

நல்ல நண்பனின் தன்மை, பதில் உதவி எதிர்பாராமல் உதவுவது.

எவ்வளவு அபத்தமான ஒரு கற்பனை!

நண்பர் இல்லாதவர் மிகக் குறைவு. உங்களுக்கும் எவ்வளவோ நண்பர்கள் இருக்கலாம். அதில் யார் யாருக்கு, பதிலுக்கு எந்த ஒரு உதவியையும் எதிர்பாராமல், நீங்கள் உதவுவீர்கள்.

எந்த ஒருவரும் வேறு யாருக்குமே பதில் உதவி எதிர்பார்க்காமல் உதவுவதாகவோ, உயிரைக் கொடுக்கும் வைராக்கியமோ இல்லை சார். இன்று நாம் செய்யும் உதவி இன்சூரன்ஸ் போல ஒன்று. நமக்குத் தேவைப்பட்ட போது நமக்கு அவர்கள் உதவுவார்கள்

என்ற ஒரு நம்பிக்கை.

எல்லாருமே இல்லாத ஒன்றைத் தேடித் திரிகிறார்கள்.

இப்படிப்பட்ட நண்பரைத் தேடுவது அட்சய பாத்திரத்தைத் தேடுவது போல. தனக்கு பதில் உதவி எதிர்பார்க்காத நல்ல ஒருவரைத் தேடி வருகிறார்கள். நம்மில் பலர், சிறு உதவிகளை மற்றவர்களுக்கு செய்து மற்றவரை இம்ப்ரெஸ் செய்து (மசால் வடையை எலிப் பொரியில் வைப்பது போல) பார்க்கிறார்கள்.

பலர் கண்டுக்காமல் போக, சிறு உதவிகளை அனுபவித்து சிலர் டாட்டா சொல்லிவிட்டுப் போகிறார்கள். அவர்கள் மீது (பொரியில் சிக்காத எலி மாட்டியிருந்த மசால்வதையைத் தின்றுவிட்டு போய்விடுவதைப் போல) நமக்கு ஒரே கோபம்.

உதவும் மனம் படைத்த நல்ல இதயம் கொண்டவர் இல்லாமல் இல்லை. சில பிறவிகள் இல்லாமலில்லை. அவர்களையும் நாம் உதவி செய்வது செய்வது தவறோ என்று நினைக்கும் அளவு செய்வார்கள் பயன் அடைந்த சிலர். இதில் கவனிக்க வேண்டி யது என்ன வென்றச்சால் இப்படிப்படவர் மக்கள் தேடும் அளவு எண்ணிக்கையில் அதிகமாக இல்லையே, என்ன செய்ய?

உண்மைக் காதலும் நட்பும் இரண்டு இடத்தில் நிறையவே கிடைக்கும். ஒன்று கனவு மற்றது சினிமா. உண்மை வாழ்க்கையில் இந்த இரண்டையும் எதிர் பார்த்தால் கஷ்ட–நஷ்டகள் தப்பாது.

இந்த உண்மையை நம் தலையில் தங்குவதற்கு உதவி செய்த கழுதையாரின் கதையைப் படிப்போம்.

அந்தக் கழுதைக்கு இரண்டு நண்பர்கள். அந்த கதையைப் படித்ததும் அவர்களின் நட்பை அலசுவோம்.

நாம் நண்பர்கள் என்று சிலரை தேடுவது எதனால், நமது நண்பர்கள் யார், அவர்களை நாம் எப்படியெல்லாம் பெறுகிறோம்? இவற்றை கடைசியாக அலசுவோம்.

நட்பின் ஆழங்கள்

# கதை 13.
# கழுதையின் நண்பர்கள்





கழுதையின் நண்பர்கள் யாராக இருக்கும்?

'வேறு நாலு கழுதைகள்தான்', என்று தப்புக் கணக்கு போடாதீர்கள். ஒரே குணமுடைய நான்கு உயிர்கள் ஒற்றுமையுடன் செயல்படுவது இயற்கையின் நியதிக்கு முற்றிலும் எதிரானது.

வெவ்வேறு குணம், பலம், அறிவு கொண்டவர்களாலேயே ஒன்று பட முடியும். நண்பர்களாக வெகு நாட்கள் இயங்க முடியும்.

உதாரணமாக ஒரு தாழ்வு மனப்பான்மை உள்ளவர், தாராளமாக புகழும் ஒருவரை நண்பரென்று கட்டிப்பிடிப்பார். பொய்யான நல்ல வார்த்தைகளை, போலியான புகழ்ச்சிகளை தாராளாமாக அள்ளித் தருவது யாரால் முடியும்? மனசாட்சியைத் தள்ளிவைத்து, ஒரு ஏமாளியின் உழைப்பை ஓசியில் பெற பலர் காத்திருக்கிறார்களே,

அவர்களால்தான்.

தன்னை ஒரு உடல் பலம் அற்றவராக எண்ணுபவர், எப்போதாவது அடி – உதையில் பயந்திருந்தால், பலசாலி ஒருவரை நண்பராகத் தேடுவார்.

இந்த வகை ஆசாமிகள் எல்லோருக்குமே, ஊதாரித்தனமான செலவுக்கு பணம் கொழிக்கும் ஒரு சில மனிதர்கள் தேவை. அவர்களும் வந்து சேருவார்கள்.

செல்வத்தில் புரளும் வகை மக்களுக்கு பெரும்பாலும் கல்வி அறிவு, உடல் பலம் பொது அறிவு ஆகியவற்றில் பெரும் குரைவு வருவதுண்டு

இவர்கள் காசில்லாத பலர் அறிவில் உடல் பலத்தில் ஒரு சில சில்லரைகளுக்காக எந்த சில்லரை வேலைகள்ஒளயும் செய்யத் தயாரான மக்களை நண்பராகத் தேடி வருவார்.

நமக்கு தெரிந்த. பலர், ஒரு ரௌடியை, ஒரு போலீஸ் அதிகாரியின் நட்பை, ஒரு அரசியல் பிரமுகரின் அருகாமையை தேடுவது, எதனால்? நாம் நம்மை பலவீனமானமாக உணர்ந்ததால்.

உடல் பலம் மாத்திரமே கொண்டு பிழைப்பவர்கள், சமூகத்தில் அங்கீகாரம் பெற, கற்றவர்களின் நட்பை தேடுவதுண்டு.

தாழ்வு மனப்பான்மை கொண்ட மக்களுக்கு என்றும் குறைவில்லை இல்லையாா? நாலு நல்ல வார்த்தைசொன்னாலே போதும், இவர்கள், ஒரு நாய் மாதிரி, நன்றி விசுவாசத்தோடு செ ான்னவரின் காலைச் சுற்றிவரும் முட்டாள்கள். இவர்களுக்கும் நல்ல டிமாண்ட்.

மேலே அலசிய அறிவின் அடிப்படையில் இப்போது கழுதையின் நண்பர்களை ஆராயலாம்

கழுதையின் நண்பர்கள் யார் யார்?

ஒரு காட்டை ஒட்டிய ஒரு கிராமத்தில் வண்ணார் ஒருவரின் வாகனமாக வாழ்ந்து வந்த நம் கதாநாயகன் கழுதையின் முதல் நண்பன், பிறவியிலேயே புத்திசாலியான, ஒரு நரி ஒன்று.

இந்த நரி, தனது காட்டிலிருந்து அடிக்கடி இந்த கிராமத்தை அடைந்து, அறிவுப் பசியையும், முடிந்தபோது சிறிது வயிற்றுப்

பசியையும் போக்க முயற்சி செய்து வந்தது.

நரி, முதன் முறையாக கிராமத்திற்கு வந்தபோதே, இந்த கழுதையைக் கண்டது. அதன் சாதுவான குணம் (சுறுசுறுப்பே இல்லாத வகையான ஒரு பிராணி) நரியாரை மிகவும் கவர்ந்தது.

இந்த மிருகத்தினால் தனக்கு ஆபத்து எதுவும் இல்லை என்று விரைவாகவே புரிந்து கொண்டது. இப்படியும் ஒரு மிருகம் உயிர் வாழ முடியுமா என்று அதிசயப்பட்டது. கழுதையுடன் சிறிது பேசிய பிறகு, இதன் மனம் முழுவதும் ஆற்றாமை கொட்டிக் கிடப்பதை உணர்ந்தது.

யாராவது சிறிது நேரம், அதன் குறைகளைக் காது கொடுத்து பொறுமையாகக் கேட்டதாலேயே அவரைக் கடவுளாக காணத் தொடங்கும், இந்த அப்பாவிக் கழுதை.

இதன் நட்பு எப்போதாவது உபயோகமாகும் என்று கிராமத்திற்கு வரும் போதெல்லாம், கழுதையின் துயரங்களை கேட்டு ஆறுதல் கூறி, நட்பை பலப்படுத்திக் கொண்டது நரி.

நரியின் சிறிய உருவமும், நாயைப் போல தோற்றமும் இருக்கிறது. இதனால் தன் உயிருக்கு ஆபத்தில்லை; போதாத குறைக்கு நம் துக்கங்களைச் சொல்லி அழ ஒரு தோள் கிடைத்த மகிழ்ச்சியில், நரியைத் தன் நண்பனாக ஏற்றது கழுதை.

நரிக்குக் கழுதையைத் தவிர வேறு ஒரு நண்பன் உண்டு. அது, காட்டில் வாழும் சிங்கம் ஒன்று. சிங்கத்தின் பலம், வேகம் இரண்டும் தனக்கில்லாதது நரிகளுக்கு ஒரு பெரிய குறை.

தான் வேட்டையாடும் போது, நரி போன்ற பிராணிகளின் வயிறையும் வளர்க்க, சிங்கம் உதவிவருகிறது.

சிங்கம் போன்ற பலமும் வேகமும் உள்ள மிருகங்கள், ஒட்டகச் சிவிங்கி, காட்டெருமை போன்ற பெரிய மிருகங்களை ஒரே அடியில் வீழ்த்தும். பிறகு, வீழ்த்தியதை, குடும்பத்தோடு தின்று நரிக்கும் மற்றும் நரியைப் போல உள்ள வேறு சில சிறிய மிருகங்களுக்காக விட்டுச் செல்லும்.

எனவே, நரியார், அவ்வப்போது, சிங்கத்திற்கு வணக்கம் செ ால்லி, அதன் சிறந்த பலத்தை, மிகுந்த அழகைப் புகழ்ந்து பேசி தன் நட்பை அடிக்கடி உறுதி செய்வார். சிங்கத்திற்கும் அதனால்

மகிழ்ச்சியே!

நமக்கு மட்டுமில்லை, எல்லா உயிர்களுக்குமே வேண்டிய அளவு உணவு போன்ற வாழ்க்கையின் முக்கியமான அல்லது அடிப்படைத் தேவைகள் கிடைத்த பிறகு சிறிது புகழ்ச்சி, பெருமை, சமூகத்தில் ஒரு பெரிய மனிதராக ஒரு அங்கீகாரம் என்று தேடுவதும் ஒரு வழக்கம் தானே.

இந்த கழுதைக்கும், சிங்கத்திற்கும் ஒருவரை ஒருவர் அறிமுகமில்லை. ஆனாலும் நரி மூலமாக ஒருவரை ஒருவர் அறிவார்கள்.

இப்போது கதைக்குள்ளே போவோம்.

வேட்டையாடும் போது சின்ன ஆக்சிடெண்ட். அதன் விளைவு, சிங்கத்தின் முதுகு எலும்பு முறிந்தது. ஓடி வேட்டையாட முடியாத நிலமை. அன்றிலிருந்து சிங்கமும், நரியும் பட்டினி.

கிராமத்திலுள்ள கழுதை எதற்கும் பயனில்லாதது. அதை ஏமாற்றி காட்டிற்கு அழைத்து வருகிறேன். அதை அடித்துத்தள்ள என் பலம் போதாது. சாதுவான இந்த கழுதையை முதுகு எலும்பு முறிந்திருந்தாலும், உங்களால் சாய்க்க முடியும். பிறகு, இருவரும் பசியாறலமே என்று நரி சொல்ல, சிங்கம் மகிழ்ந்தது.

நரி நமக்காக தன் நண்பனையே பலி கொடுக்கிறதே என்று நட்பின் சிறப்பை நினைத்து மகிழ்ந்தது. . நரிக்கு அறிவு அதிகம் இருந்தாலும், கழுதையை வீழ்த்த பலம் போதாது, இல்லையா?

மனிதர்களுடன் உள்ள சகவாசத்தினாலோ, இல்லை, நரியின் வாய்ச் சவடாலோ தெரியவில்லை, அப்பாவிக் கழுதை, நரியின் வார்த்தைகளை நம்பியது. காட்டில், வளமான எதிர்காலத்திற்கு வழிகள் இருப்பதாக சொல்ல, கழுதை, நரியை நம்பி, காட்டிற்கு வந்தது. காட்டில் பல மைல் தூரம் நடந்தபின், பயம், களைப்பு இரண்டும் சேர்ந்து கழுதையை வாட்டியது.

தட்டுத்தடுமாறி, ஒரு மாதிரியாக, சிங்கத்தின் இருட்டான குகைக்குள் நரியும் கழுதையும் அடைந்தன. பசித்து காத்திருந்த சிங்கம் கழுதையின் மீது பாய்ந்தது. உடல் நலம் குறைந்து, பசி அதிகரித்து உடல் பலமும் குறைந்து இருந்ததால், சிங்கம் கழுதையைக்கு வைத்த குறி தவறி, குப்புற விழுந்து மயக்கமானது.

வளமான எதிர்காலத்தை எதிர்பார்த்து வந்த கழுதைக்கு பலமான ஏதோ ஒன்று தன் மிக அருகில் விழவே, பயத்தில் தானும் மயக்கமாகி கீழே விழுந்தது.

சிங்கத்தின் உதவி இல்லாமலேயே, மயக்கமடைந்து விழுந்து கிடந்த கழுதையை, சுலபமாக கொன்று தின்னத் தொடங்கியது, நரி.

சிறிது நேரம் கழித்து மயக்கம் தெளிந்த சிங்கம், தானும் விருந்தில் சேர்ந்து கொள்ள, இருவரும் பசி தீர, மகிழ்ந்தார்கள்.

சிங்கம், தனக்காக தன் நண்பனை பலி கொடுத்த நரியைப் பாராட்டியது.

நரிக்கு, கழுதை மாதியான – பலம் கொண்ட ஆனால் அறிவு குறைந்த மிருகங்களைக் கொல்ல சிங்கத்தின் உதவி எதுவுமே தேவை இல்லை என்று புரிந்து கொண்டது.

அலைக்கழித்து, களைப்பு அடையவைத்து, சுலபமாக, தானே அதைக் கொல்லும் புதிய உத்தியைக் கண்டு பிடித்து விட்டது இல்லையா?

இப்போதெல்லாம், முதுகு ஒடிந்த சிங்கத்தை நலம் விசாரிக்கக் கூட நரி போவதில்லையாம்.

வாசகர்களே ! நண்பர்கள், என்றேனும் ஒருநாள் பிரிவார்கள். பொதுவாக, பலர் நண்பர்களைப் பிரிவது இப்படித்தான்.

மிக மிக சில நட்புகளே இதற்கு விதிவிலக்கு ! முக்கியமாக இவர்கள் நட்பிலே பணம் காசு தொழில் ஆகியவை எதுவுமே குறுக்கே வந்திருக்காது.

உங்கள் நண்பர்களை ஊன்றிக் கவனியுங்கள்.

உங்களுக்கு பல நண்பர்கள் கூட்டம் இருக்கலாம். ஒன்று இரண்டல்ல. அலுவலகத்தில், வெளி உலகத்தில், கல்விக் கூட நாட்களில் இணைந்தவர்கள் என்று பல இருக்கலாம்.

அதை ஊன்றிக் கவனியுங்கள். அந்த நண்பர்களிடையே, ஒரு சிலர் கழுதைகள் போன்று இருப்பது உறுதி. இவர்கள் ஓடியாடி கடுமையாக உழைப்பார்கள். இது இவர்களின். பிளஸ் பாயிண்ட். அதே சமயம் தன்னம்பிக்கை குறைவு மற்றும் சுய பச்சாதாபம் இவர்களுடைய பெரிய மைனஸ்.

நண்பர் கூட்டத்தில், நரி போன்ற ஒரு சிலரையும், சிங்கம் போன்ற ஒன்று அல்லது இரண்டு பேரையும் காணலாம். நரி–மனிதர்கள் சிங்க–மனிதருடன் கூட்டு சேர்ந்து, இந்த கழுதை போன்றவரை எப்போழுதும் ஏமாற்றி அவர்கள் உழைப்பை இலவசமாக அடைவார்கள்.

உங்கள் நண்பர்கள் கூட்டத்தில், நீங்கள் நரியா, கழுதையா, சிங்கமா?

நாம் எல்லோருமே நண்பர்களை தேடுகிறோம். ஏன்? பயம்.

(1) நமக்கு எந்த நேரத்திலும் ஆபத்து வரலாம், கஷ்டங்கள் வரலாம்.

நண்பர் என்று ஒருவர் இருந்தால் நம்மைக் காப்பாற்றுவார் என்ற ஒரு (தவறான) நம்பிக்கை.

(2) ஒரு சொந்தக்காரர் (உறவுக்காரர்) நல்ல நண்பராக இருக்க முடியாதா? முன்பின் தெரியாத ஒருவரை ஏன் ஒரு நண்பனாகத் தேடுகிறோம்?

(3) சொந்தங்கள் (உண்மை பேசுவதால்) நமது மனதைப் புண்படுத்தலாம். அதாவது, நண்பர்களைப்போல போலியாக புகழாமல் இருக்கலாம். இவர்கள் (இல்லாத) நல்ல இயல்புகளைப் பாராட்டுவதில்லை. (செய்யும்) குற்றங்கள், குறைகளைக் காண்பார்கள்.

சிந்தியுங்கள் : நம் மேல் உண்மையான அக்கரை உள்ளவர்கள், நம்மைப் பொய்யாகப் புகழமாட்டார்கள். உண்மையான அபிப்பிராயங்களை சொல்வார்கள். அது உங்களுக்குப் பிடிக்காது. ஆகவே நண்பர்கள், சொந்தங்களில் கிடைக்கமாட்டார்கள்.

(ஆ) நல்ல உறவினர்கள், செய்யும் உதவிக்கு நன்றி சொல்லும் வழக்கம் நம் கலாச்சாரத்தில் இல்லை. செய்த எந்த உதவிக்கும்

நன்றி சொன்னாலோ, செய்த தவறுக்கு சாரி சொன்னலோ அதோடு அந்த கணக்கு முடிந்து விட்டதாகக் கொள்ளலாம்.

எனவே உறவினர் யாருமே, நீங்கள் செய்யும் உதவிக்கு விழுந்து விழுந்து நன்றி சொல்ல மாட்டார்கள்.

எந்த மகனும், தனது தந்தை–தாய் தியாகங்கள் பல செய்து தன்னை நன்றாக படிக்கவைத்து வாழ்க்கையில் உயர்த்தியதற்கு நன்றி தெரிவித்ததில்லை.

முதியவதில் தன்னைக் காப்பாற்றும் மகனை எந்த தந்தையும் பாராட்டிப் பேசியதில்லை. ஏன்? இருவரும், தங்கள் கடமையைத்தான் செய்தாக உணர்ந்ததால்.

கடமையைச் செய்ய கைமாறும் பாராட்டும் எதற்கு?

உதவி செய்பவர்கள் யாருமே நண்பர்களும் இல்லை உறவுகளும் இல்லை. அவர்கள் நல்லவர்கள். நல்ல எண்ணம் கொண்ட எவரும், துன்பம் அடைந்தவர் யாராயிருந்தாலும் கேட்காமலேயே உதவுவார்கள்.

உதவி தேவைப்படும்போது அலட்டிக்கொள்ளாத நண்பர்களும் (நீங்கள், ஏன் நான் உள்பட) சொந்தங்களும் எல்லா காலத்திலும், எல்லா தேசத்திலும் இருந்திருக்கிறார்கள். அதில் எந்த விதத்திலும் நாமும் குறைந்தவரில்லை. எவ்வளவு பேருக்கு நாம் உதவி வருகிறோம்?

நண்பரைத் தேடுபவர்கள்

எவருக்கும் எப்போதும் உதவிக்கரம் நீட்டாதவர்கள் எல்லோருமே, மற்ற அனைவரும் தனக்குத் தேவைப்படும் போதெல்லாம் உதவி செய்யக் கைகட்டி நிற்கவேண்டுமென எதிர்பார்ப்பது வழக்கம்.

பிறருக்கு உதவுவதை ஒரு கடமையாக, தருமமாக, ஒரு வரமாக நினைப்பவர்கள் பிறர் உதவிக்காக, என்றுமே, ஏங்கி நிற்பதில்லை. அவர்களுக்கு தேவைப்படும் போது, தேவையான உதவிகள் தன்னாலே வரும்.

ஒரு முறை அல்லது இருமுறை இல்லை, பல நூறு சம்பவங்களை நான் கண்டிருக்கிறேன்.

பதிலுக்கு எதுவும் எதிர்பாராமல் செய்யும் உதவி – ஒரு உண்மை நிகழ்ச்சி

ஒரு பெரியவர். பொரியில் நிபுணர். பெரும் செல்வம் சம்பாதித்தும் தனக்கென ஒரு குடிசை கூட வாங்காமல், சுற்றியுள்ள பலருக்கு உதவுவதிலேயே செலவழித்தார். சொந்த பந்தங்களோ முட்டாள், அறிவில்லாதவன் என்றெல்லாம் ஏசின.

சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் நடந்த ஒரு உண்மை நிகழ்ச்சி. தன் வாழ்வின் கடைசி 14 வருடங்கள், மனைவியுடன் (முன் பின் அறிமுகமல்லாத) ஒரு கிராமத்தில் வாழ்ந்தார்கள்.

அந்த கிராமத்தில், அவரிடமிருந்து யாருமே காசு பணம் கேட்பதில்லை அல்லது பெறுவதில்லை. பெரியவரின் பிள்ளைகள் கட்டாயமாக அனுப்பி வைக்கும் பணம், (கல்வி, சிகிச்சை போன்ற) அவசரத் தேவைக்காக தன்னை அணுகும் ஏழைகளுக்கு கொடுத்து வருவார்.

ஒரு முறை, அப்படிப்பட்ட உதவி கேட்டு வந்தவருக்குத் தருவதற்கு பணம் இல்லாத நிலையில் அவர் மனம் வருந்தி கண்ணீர் விட்டதாக அவருடைய நிழலாக வாழ்ந்து வந்த நண்பர் ஒருவர் தெரிவித்தார்.

அடுத்த நிமிடம், சைக்கிள் மணி ஓசை அவர்களின் கவனத்தை ஈர்கிறது. தபால்காரரின் வருகை நிலமையை மாற்றியது, அவர் (பெரியவரின் புத்தகங்களை வெளியிடும்) பதிப்பகத்திலிருந்து எழுத்தாளர் சன்மானம் மணியார்டராக வர, உதவி தேடி வந்தவரின் தேவையை, அந்த தொகை, பூர்த்தி செய்யவே, பெரியவர் மகிழ்ததாகக் கூறினார்.

பிறருக்கு உதவி செய்த பின், நன்றியை அல்லது புகழ்ச்சியை எதிர்பார்க்கும் மக்கள் தங்களை தாழ்த்திக் கொண்டவர்கள். இவர்கள் ஏமாறப் பிறந்தவர்கள். இவர்களை கழுதை–மனிதர்கள் எனலாம்.

பிறர் துன்பம் போக்கியதில், அல்லது மற்றவர் அடையும் மகிழ்ச்சியில் தான் மகிழ்பவர்கள் சாதாரண மக்களிலிருந்து முற்றிலும் வித்தியாசமானவர்கள் இல்லையா? உதவப்

பொருள் இல்லாததால் துயரம் கொள்ளுவோரும், தனக்குப் பொருளில்லாததால் கதறும் மக்களும் முற்றிலும் வேறுபட்டவர்கள்.

நான் நண்பர்களால் ஏமாற்றப்பட்டேன் என்பவரின் கதாயை கேளுங்கள். நண்பர்கள் என்ற போர்வையில் பலர் இந்த கழுதை–மனிதர்களை நெருங்கி, புகழ்வார்கள். பதிலாக சில உதவிகளை பலர் பெறுவார்கள். பதிலுக்கு நன்றியும் புகழ்ச்சியையும் மாத்திரமே கொண்டு வருவார்கள். இவர்களை ஓட்டாண்டியாக்கி விடுவார்கள்.

பிற்காலங்களில், இந்த கழுதை மனிதர் தாம் உதவிய நண்பர்களிடமே உதவிகளை எதிர்பார்த்து, கிடைக்காமல் போக நண்பர்கள் ஏமாற்றியதாக அழுவார்கள்.

நண்பர்களால் ஒரு வசதி?

சிலர் சொந்தங்களை ஒதுக்கிவிட்டு நண்பர்களைத்தேடுவது எதனால்?

நண்பர்களானால், தாம் பெற்ற உதவிக்கு பிரதி–உபகாரம் அல்லது பதிலுக்கு–உதவி செய்யத் தேவை இல்லை; உதவி அடைந்த பிறகு நண்பர்களை எப்போது வேண்டுமானாலும் கழட்டிவிடலாம்.

சொந்தங்களை கழட்டிவிட முடியாது என்பது உண்மையான பயம் தானே?

ஒரு மனிதன் சொந்தக்காரனாக ஒரு விதத்திலும் நண்பனாக வேறு விதத்திலும் எப்படி செயல்பட முடியும்? இதில் மூன்றுவகை மனிதர்கள் அடக்கம்,

1. பிறருக்கு கனவிலும் கூட உதவி செய்ய நினைக்காத மக்கள். இவர்களே மக்களில் அதிகமானவர்கள்.

2. தானும் உதவிகள் செய்து, பிறரிடம் உதவிகளை கேட்டுப் பெறும் ரகமான மக்கள். இப்படிப்பட்டவர் நம் மத்தியில் ஓரளவுக்கு இருக்கிறார்கள்.

கடைசியாக

3. பிறரிடம் உதவி எதையும் கேட்டோ அல்லது எதிர்பார்த்தோ

வாழாமல், பிறருக்கு உதவுவதை ஒரு கடவுள் தந்த வரமாக, மகிழ்ச்சிகரமான ஒரு சந்தர்ப்பமாக, செய்து வாழும் மக்கள்.

மேலே கண்ட மூன்றாவது தர மக்களில் சிலர், இந்த வகை செயல்கள் தங்களை சுவர்கத்தில் இடம் கிடைக்க வழிதரும் என நினைப்போரும் இருக்கலாம். அதனால் தானோ, இவர்கள் பிற மனிதரிடமிருந்து எந்த பிரதி பலனோ அல்லது, புகழ்ச்சியோ எதிர்பார்ப்பதில்லை.

சிலருக்கு, எளியவருக்கு உதவுவதில் உண்மையான மகிழ்ச்சி கிடைப்பதுண்டு.

வேறு சிலர் நேர்த்திக் கடனாக, கடவுளிடம் காண்ட்ராக்ட் பேசி, அதன் விளைவாக எளியோருக்கு அவ்வப்போது உதவுபவர்களும் உண்டு.

ஹரித்துவாரில் ஹரிகிபெளடி எனப்படும் கங்கை நதிக்கரையில் பிரதிபலன் எதிர்பார்க்காமல் ஏழைகளுக்கு உணவு கொடுக்கும் காட்சிகளை நிறையவே பார்க்கலாம்.

பெளர்ணமி இரவுதோறும் திருவண்ணாமலையில் கிரிவலம் வரும் மக்கள் கூட்டத்தில், பிரதி உபகாரமோ, நன்றி, புகழ்ச்சி ஏதும் எதிர்பாராமல் அளிக்கப்படும் உதவிகளைக்காணலாம்.

ாரெல்லாம் நண்பர்களைத் தேடுவார்கள்?

வெகு சிலரே தானும் பிறருக்கு உதவி தானும் பிறர் உதவியைப் பெறுவார்கள். இவர்களுக்கு எல்லோருமே நண்பர்கள்தான்.

தாழ்வு மனப்பான்மை, தன்னம்பிக்கை ஆகியவை இல்லாதவர்கள் பிறர் தனக்கு உதவும் வகையிலான நண்பர்களைத் தேடுவார்கள்.

தன்னம்பிக்கை, பிறருக்கு உதவும் குணம், உண்மையான இறை உணர்வு ஆகியவற்றை அடைந்தவர்களுக்கு, நண்பர்கள் தேவை இல்லை.

இந்த வகை மக்கள் என்றுமே எவருக்கும் கழுதைகளாகவோ, நரியாகவோ இல்லை சிங்கமாகவோ ஆகமாட்டார்கள்

## கதை 14

## கண்ணனின் நண்பர்கள்

ஆமாம், இந்த கண்ணன் யார்? இவர் நண்பர்கள் யார்? கண்ணனைப் பற்றி முதலில் பார்க்கலாம்.

கண்ணன் நண்பர்களிடையே, ஒரு  கர்ணன் டைப். இவரைச் சுற்றி வரும் நண்பர்களுக்கு இவரே ஒரு மணிபர்ஸ், க்ரெடிட் கார்ட் எல்லாமே என்று சொல்லலாம். இவர் அருகில் இருந்தால் நண்பர்களுக்கு மணி பர்ஸ் என்றும் தேவைப்பட்டது இல்லை. பெட்ரோல் செலவாகட்டும், ஓட்டல் பில்லாகட்டும், சினிமா டிக்கெட்டாகட்டும், கண்ணன் மற்றவரை பர்ஸ்சை எடுக்கவிடமாட்டார். இதைக் கண்ணன் நம்பினானாரோ இல்லையோ தெரியாது. அவனுடைய நண்பர்கள் தீவிரமாக நம்பினார்கள் என்று கண்ணன் நம்பினான்.

மனிதர் படித்தவர், பலரை நண்பர்களாகக் கொண்டவர். அரசாங்க வேலையை விட்டு விட்டுத் தனியாக தொழில் தொடங்கினார். அதை வெற்றிகரமாக இயக்க, பலவித நண்பர்களை ஈடுபடுத்தினார்.

எல்லாமே வெற்றிகரமாக நிகழ்ந்தன.

விதியின் சதியோ, கிரகங்களின் கோளாரோ... வேறு எதுவோ தெரியாது, கண்ணனுக்கு அதிவேகமாக பணக்காரராக ஆசை

வந்தது.

பந்த்தையங்களில் அதிவேகமாக ஓடும் குதிரைகள் அவரைப் பணக்காரராக வளருவதற்கு அதிக சந்தர்ப்பங்கள் தருமென அதிகமாகவே நம்பினார்.

மகாபாரதத்தில் பாண்டவர்கள் ஓட்டாண்டியாகி தெருவில் நிற்க இந்த வகை வசதிகள் அந்த நாளிலும் இருந்தது என்ற உண்மை கூட கண்ணனுக்குத் தெரியும்.

அதன் பெயர் சூதாட்டம் என்று கண்ணனுக்கு மட்டுமில்லை அதைத் தெரியாத எவருமே இல்லை.

இந்த விபரீத ஆசை கண்ணனைக் கழுதையாக்கியது.

நரிகளும் சிங்கங்களும், நண்பர்கள் உருவத்தில், வந்து சேர்ந்தன.

கண்ணனின் சுற்றங்கள் இதை கேள்விப்பட்டு வேதனை அடைந்தார்கள். செய்த எச்சரிக்கைகள் வீணாயின. தொழிலில் வந்த வருமானம் எல்லாமே குதிரைப் பந்தய மைதானத்தை அடைந்தது. அதனால், தொழில் நலிந்தது.

நரி—சிங்க நண்பர்களின் அன்றாட அத்தியாவசிய செலவுகளையும், அநாவசிய செலவுகளையும் கண்ணனே ஏற்றார்.

கண்ணனுக்கு ஜாக்பாட் கிடைக்க வழி செய்வதாக நம்பிக்கை அளித்த நரிகள் பல உத்திகளை தெரிவித்தன. நம்பிய கண்ணனிடமிருந்து சுலபமாக பணத்தைத் தட்டிச் சென்றன.

ஒரு கட்டத்தில், கண்ணன் செலவில், நரி—நண்பர்கள் குதிரைப் பந்தயத்திலேயே ஒரு சில லட்சங்களையும் சம்பாதித்த செய்தியும் கண்ணனை எட்டியது.

அன்றிலிருந்து, நரிகள் கண்ணனை தொடர்பு கொள்வதை நிறுத்திவிட்டார்கள். அதோடு அவர்கள் போன இடமோ திசையோ தெரியவில்லை.

நண்பர்கள் என்ற நினைப்பே, மாயையின் வேலை.

(ஒரு மாயை. மாயை என்பது, இல்லாததை இருப்பது போலவும்,

இருப்பதை இல்லாததுபோலவும் நம் மனதில் தோற்றம் தரும் ஒரு விபரீதமான சக்தி).

பெரும்பாலான நண்பர்கள் பிரிவது கதையில் கண்டவாறு தான்,

இனிமேல் இந்த நபரிடமிருந்து நமக்கு தேவையான பயன் இல்லை. இந்த மனிதரிடம் நாம் கடன் பட்டு விட்டோம். ஆகவே கலைந்து போவதே லாபம் என்ற எணணம்.

அதோடு, கழுதைகளுக்கு, பேராசையும் ஒரு மிகப் பெரிய மைனஸ்.

## கதை 15.

## ரத்தன்சேட் கணேசனைப் பார்க்கவில்லை!



ஹைதராபாத் நகரம். ஒரு வகையில் மும்பாய் (அதான் பழய பம்பாய்) போன்றது. நம் நாட்டின் பல பாகங்களிலிருந்து மக்கள் இடம் பெயர்ந்து இங்கே வாழ்கின்றனர்.

சிந்தி மொழி பேசும் சேட்டுகள் இங்கே கடை வைத்திருக்கிறார்கள். குஜராத்திகள் வசிக்கும் பகுதிகள் என்று சில உண்டு. அதே போல மலையாளிகள், மற்றும் தமிழர்கள் பெரும்பாலோர் வாழும் பகுதிகள் என்றும் உண்டு.

இந்தி தெரிந்தால் போதும், மற்ற மொழிகளை அறியவேண்டிய அவசியம் இல்லை. குஜராத்தி மீடியத்தில் மட்டுமில்லை, தமிழ் மற்றும் பல மொழிகளில் 10 கிளாஸ் வரை படிக்க வசதி உண்டு.

கணேசனின் அப்பாவுக்கு மிலிடெரியில் வேலை. 3 வருடத்திற்கு ஒரு முறை டிரான்பர் உண்டு. ஒரு கட்டத்தில், ஐதராபாதுக்கு வந்த குடும்பம் அங்கேயே தங்கிவிட்டது. மற்ற நகரங்களைவிட விலைவாசி குறைவு என்ற ஒரே காரணம் தான்.

ஐதாராபாதிற்கு வந்த வருடம், கணேசனின் அண்ணன்கள் இருவரும் கல்லூரியில் சேர்ந்தார்கள். கணேசன் கடைக்குட்டி. ப்ளஸ் டூவில் சேர்ந்தான் எல்லோருக்கும் செல்லம். படிப்பில்

ஏதோ பரவாயில்லை. அப்பா வெளியூரிலிருப்பதால் அம்மாவின் தலையில் எல்லா பொருப்பும் ஏறியது.

கணேசனுக்கு ஐதராபாதிற்கு வந்ததிலிருந்து வாழ்க்கை முற்றிலும் மாறிவிட்டது. அண்ணன்மார்கள் கணேசனைக் கண்டு கொள்வதில்லை. கணேசனுக்கு ஏகப்பட்ட நண்பர்கள். குறிப்பாக. குஜராத்திலிருந்து நூறு வருடங்களுக்கு முன்னால் குடியேறிய மக்கள்.

படிக்கும் காலத்திலேயே, பாதி நாட்கள் கணேசன் வெளியில் தங்க ஆரம்பித்தான். நண்பர்களின் குடும்ப விசேஷங்களாகட்டும், பண்டிகைகளாகட்டும், உதவி செய்வதாக, நண்பர்கள் வீட்டிலேயே தங்கிவிடுவான்

நண்பர்கள் வீட்டில், கணேசன் மிகவும் பிரபலம். அவ்வப்போது தங்கள் வீட்டு பையன்களுக்கு வாங்கும்போது இவனுக்கும் துணிமணிகள் வாங்கித் தருவாகள். தன்னையும் அவர்கள் வீட்டில் ஒருவராக நடத்துவதாக கணேசனுக்கு ஒரு மகிழ்ச்சி.

இது கிராஜுவேஷன் (ஆ குஞி) கடைசி வருடம். கணேசனின் அம்மா, அழாத குறையாக சொன்னாள். இந்த வருடமாவது நண்பர்களை தள்ளிவைத்து, நல்ல மார்க் எடுக்க முயற்சி செய். உன் நல்ல வாழ்க்கை உன் தனிப்பட்ட வெற்றியில் உள்ளது. நானோ அல்லது நண்பர்களோ அதற்கு உதவ முடியாது. கணேசன் காதில் இந்த அறிவுரைகள் சேரவில்லை!

கணேசன், தன் நண்பர்கள் செய்வதைத்தான் செய்வான். அந்த ஆண்டு சர்வகலாசாலை பரிட்சைகள் நடந்து முடிந்தன.

விடுமுறையில், தன்னுடன் படித்த பையன்களில் சிலருக்கு ஹைதராபாதிலும், வேறு சிலருக்கு அவரவர்கள் மாநிலத்திலும் திருமணம் நடந்தது.

பரிட்சை முடிவுகள் வெளியாயின.

நண்பர்களைப் போலவே, தானும் சர்வகலாசாலை தேர்வுகளில் பெயிலாகாததில் கணேசன் பெரிய மகிழ்ச்சி அடைந்தான்.

சில வாரங்கள் சென்றன. கணேசன், திரும்பவும் நண்பர்கள் வீட்டை அடைந்தபோது, அவனுக்கு வரவேற்பு வழக்கம்போல இல்லை.

ஒரு நண்பனின் தாய் விவரமாக சொன்னாள்

தம்பி. எங்கள் குடும்ப வழக்கங்கள் வித்யாசமானது. கல்லூரிப் படிப்பு வெறும் அலங்காரத்திற்காகத்தான். படிப்பு முடிந்தவுடன் எங்கள் கடையில் கல்லாவில் உட்கார வேண்டும்.

இனிமேல் தன் மனைவி, கடை, குடும்பம்தான் உன் நண்பனின் வாழ்க்கைத் துணைகள். நண்பர்கள், ஊர் சுற்றுவது போன்ற வெட்டித்தனத்திற்கு உன் நண்பனின் வாழ்க்கையில் இனி இடமில்லை என்றாள்.

ஒரு ஸ்வீட் ஒன்றை கையில் கொடுத்து, உன் கல்யாணத்திற்கு மறக்காமல் பத்திரிக்கை அனுப்பு என்றாள். (பத்திரிக்கை கொடுக்கும் சாக்கில் கூட வந்து தொந்திரவு தராதே என்று சூச கமாக சொல்லி விட்டாளோ!)

கணேசனின் நண்பர்களுக்கு படிக்கும் நாட்கள்தான் விடுமுறை நாட்கள். வாழ்க்கையை வசதியாக ஓட்ட, பரம்பரை வியாபாரம் தயாராகக் காத்திருக்கிறது.

கணேசன்கள் படிப்பில் முன்னணியில் இருந்தால் மட்டுமே ஒரு வேலை கிடைக்கும். நல்ல வேலை கிடைத்தால் மட்டுமே மூன்று வேளை, நல்ல சாப்பாடு கிடைக்கும்.

படிக்கும் வயதில் தவறானவர்களை வழித்துணைக்குச் சேர்த்துக் கொண்டால் சேருமிடம் நல்ல இடமாக இருக்காது.

குறைந்த மார்க்கோடு பாசானதால், நல்ல வேலை வாய்ப்புகள் நழுவி விட்டன. இரண்டு வருடங்களுக்குமேல் திண்டாடி குறைந்த சம்பளத்தில் ஒரு வேலை கிடைத்திருக்கிறது. அதுவும் அண்ணன்கள் தயவில். அவர்கள் கண்டிப்பாக செ ால்லிவிட்டார்கள். நண்பர்கள், ஊர் சுற்றுவது என்று வேலையை விட்டு நீக்கப்பட்டால், வீட்டின் பக்கம் வரக்கூடாது.

இப்போது. ஒரு அண்ணன் தந்த பழய ஸ்கூட்டரில் ஆபீசிலிருந்து இரவு வீடு திரும்பிக்கொண்டிருந்தான்.

ஜேம்ஸ் ஸ்ட்ரீட், போலீஸ் ஸ்டேஷன் பக்கத்தில் கண்ணாடி வண்டியில், இந்த ஊரில் பெயர் பெற்ற பாவ்பாஜி வியாபாரம், பல வருடங்களாக பரபரப்பாக நடக்கிறது.

மனைவி குழந்தையுடன் காரில் இருந்தபடி, பாவ்பாஜியை ரசித்துக் கொண்டிருக்கும் அந்தக்கால ரத்தன் இந்தக்கால ரத்தன் சேட் –ஐ கணேசன் பார்த்தான்.

காரில் அமர்ந்திருந்த ரத்தன் சேட் ஸ்கூட்டரில் போன கணேசனைப் பார்க்கவில்லை!

## விமரிசனம்

இந்தியா முழுவதும் பல கணேசன்களுக்கு பணக்கார நண்பர்கள் உண்டு. தனக்கு அதிக பண வசதி இல்லாத காரணமோ. தனக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள் என்பது போன்ற காரணங்களால், தானே கழுதையாக மாறுகிறார்கள். நட்பு என்ற மயக்கத்தில் வாழ்வின் முக்கிய நாட்களை இழக்கிறார்கள்.

என்றோ ஒரு நாள் நண்பர்கள் பாதைகள் பிரியும். பாதைகள் பிரிந்த பின்னர், மயக்கத்திலிருந்து விழிப்பு வருகிறது. விழித்ததும் மாயை கலைகிறது. உண்மையின் முகம் தெரிகிறது. ஆனால் –

டூ லேட்.

## மாமியாரும் – மருமகளும்

தான் ஒரு காலத்தில் மருமகளாக இருந்ததும், ஒரு மாமியாரின் கொடுமையில் அவதிப்பட்டதும் மறந்திருக்க முடியாது. இல்லையா?

நாமாவது ஒரு மருமகள் போற்றும் மாமியாராக இருந்து பார்க்கலாமே என்ற நல்ல எண்ணம், எந்த மாமியாருக்கும் வரவே வராதா?

நமக்கும் வயதாகி முதுமை வரும். முதுமையில் தனிமையின் பயம் வரும். அன்பும் அரவணைப்பும் அவசியப்படும். நமக்கு என்ன பிற்காலத்தில் எல்லவெல்லாம் தேவைப்படுமோ அதை இன்று தனது முதியவர்களுக்கு தரலாமே என்ற எண்ணம் என்றாவது மருமகள்களுக்கு வருமா?

# கதை 16.
# வைதேகிக்குக் கவலை இல்லை !



வைதேகியின் கணவன் இறைவனடியில் சேர்ந்தாகி சில வருடங்கள் ஓடிவிட்டது. அப்போது மகன் கிட்டுவுக்கு வயது 10 தான் இருக்கும். பிறந்த வீட்டிலும் பணவசதி அதிகம். கணவன் விட்டுச் சென்ற சொத்திற்கும் குறைவில்லை. ஆனாலும், அவள் மிகுதி வாழ்விற்கு ஆதாரம் கிட்டுதான்.

வைதேகியின் மாமியார், அந்தக்காலத்தில் கெட்டிக்காரி என்று பெயர் எடுத்தவள். மாமியார்தான் வைதேகிக்கு குரு. எப்படி ஒரு குரங்காட்டி, தான் வளர்க்கும் குரங்கை கட்டிப்போட்டு, பழக்கி வேடிக்கை காட்டுவது போல, தன் கணவனை தயார் செய்து வைத்திருந்தாள்!.

தானும் தன் மகன் கிட்டுவை சிறு வயது முதல் மிகவும் கவனமாகத்தான் வளர்த்தாள். மகன் தனது எந்த தேவைக்கும் தன் கையை மட்டும் எதிர்பார்க்கும்படியாகப் பார்த்துக் கொண்டாள். படித்து வளர்ந்த கிட்டு என்கிற கிருஷ்ணமூர்த்திக்கு ஒரு

பன்னாட்டு சாப்ட்வேர் கம்பெனியில் வேலை கிடைத்தது.

மகனுக்கு திருமணம் செய்யும் நேரம் வந்தது. உடனே பயமும் தொடர்ந்தது. எனவே இடைவிடாது பெண்பார்க்கும் வைபவங்கள் நடந்தேறின. தான் முயற்சி செய்யாவிட்டால் கிட்டுவே ஒரு பெண்ணை அழைத்து வருவான். எதற்கு வம்பு?

வைதேகி, எத்தனையோ பெண்களை மகனுக்காகப் பார்த்தாள். மதுரையில் ஆரம்பித்து, சென்னையில் தொடர்ந்து, பங்களூர், பாம்பே, தில்லி என்று மகனுடன் போகாத ஊரே இல்லை. எல்லா பெண்களையும் ஏதோ ஒரு காரணம் சொல்லி தட்டிக்கழித்தாள் கூந்தல் பெரிதாக இருந்தால் குடும்பத்திற்கு ஆகாது என்பாள். குண்டு முகம், வத்தக்காச்சி, தொத்திப்பல் என்று ஒவ்வொரு பெண்ணிற்கும் அடைமொழி சேர்ந்ததே இல்லாமல், ஒரு பெண்ணையும் மருமகளாக தேர்வு செய்யவே இல்லை.

மகனோ, இரண்டு வருடங்களுக்கு மேல் சுற்றிய பிறகு, ஒரு கட்டத்தில், இந்த அம்மா நமக்கு திருமணம் செய்வதில் கருத்து இல்லை என்ற பேருண்மையை ஒரு மாதிரியாகப் புரிந்து கொள்ள, அதே சமயம் மகன் புரிந்து கொண்டதை வைதேகியும் புரிந்து கொண்டாள்.

வேறுவழி தோன்றாமல், பார்த்துப் பார்த்து, முடிந்தவரை அழகு குறைவான பெண்ணைத் தேடினாள். அழகாக இருந்து, அதனால் மகன் மருமகளின் முந்தானையில் அடக்கமாகி விடக்கூடாது இல்லையா?

கடைசியாக தன் மகனுக்கு ஒரு பெண்ணைக் கட்டிவைத்தாள். திருமணம் முடிந்தது. மகனும் மருமகளும் மிகவும் நெருக்கமாக இருக்க, வைதேகி புழுங்கினாள்.

கிட்டுவுக்கு தாய் மீது பாசம் இல்லாமலில்லை. தனக்குத் தெரிந்தவரை தாயை எவ்வளவு மகிழ்ச்சியாகச் செய்ய முடியுமோ அவ்வளவும் முயற்சி செய்தான். ஆனால் எதிலும் வைதேகிக்கு நிம்மதியோ மகிழ்ச்சியோ தரவில்லை.

வைதேகியோ, தன் மாமியாரின் வெற்றிக்கும் தனது தோல்விக்கும் காரணம் தேடினாள். காரணங்கள் அவளுக்கு என்றுமே கிடை க்கவில்லை.

திடீரென்று இதயத்தில் வலிப்பதாகச் சொல்வாள். நட்ட நடு இரவில் ஒரு பெரிய ஆஸ்பத்திரியில் பலமுறை அனுமதிக்கப்பட்டு, அடுத்த நாள், கோளாறு ஒன்றுமில்லை என்று வீட்டிற்கு அனுப்பப்படுவாள்.

இரவு நேரங்களில் மகன் தன் அருகிலே இருக்கச் செய்ய என்ன வெல்லாம் யுக்தி உண்டோ அவ்வளவையும் உபயோகிப்பாள். மகனும் மருமகளும் மிக அருகிலிருந்தால், திடீரென்று அலறுவாள்.

புது மணமகளுக்கு தன் மாமியாரைப் புரிந்து கொள்ள ஒருசில நாட்களே பிடித்தது.

பாசமான மகனுக்கு, அவன் தாயின் தடுமாற்றத்தைப் புரியவை த்தாள். திருமணத்தால் திண்டாடுவோருக்கு திசை காண்பிக்க ஆலோசகர்கள் இருக்கிறார்கள் இல்லையா. அவர்களுடன் ஆலோச னைகள் சில நாட்கள் தொடர்ந்தன.

தம்பதிகள் ஒரு முடிவுக்கு வந்தார்கள். இருவரும் வெளிநாட்டில் ஓரிரு வருடங்கள் வேலைபார்த்து விட்டு திரும்புவது. தாயார், இந்தக் கால கட்டத்தில் தனியாக இருக்கவேண்டும் என்ற ஏற்பாடு.

மகன் முதலில் செல்ல, அடுத்த மாதம் மருமகள் செல்ல, வைதேகி கோவில் குளம் என்று சுற்றி வந்தாள். பிறகு பூஜைகள் விரதங்கள் என்றும் தொடங்கினாள். மகனையும் மருமகளையும் பிரிக்க மாந்திரீகர்களைத் தேடினாள்.

ஒரு சில மாதங்கள்தான். கிட்டுவுக்கு தனது நெருங்கிய உறவினர்களிடமிருந்து அவசரத் தகவல்கள் வந்தன. உன் அம்மாவுக்கு புத்தி பேதலித்துவிட்டது. உடனடியாக வந்து பார்த்துக்கொள் என்று.

வைதேகி, கடைசியாக, கண்ணை மூடும்வரை, தூக்க மருந்து, ஷாக் ட்ரீட்மெண்ட் என்று தொடர்ந்தது.

வைதேகிக்கு இப்போதெல்லாம் மகனை இழக்கும் பயமோ கவலையோ சிறிதும் இல்லை.

**அலசல்:**

காலம் காலமாக, இடை விடாமல் தொடரும் ஒரு தொல்லை, இந்த மாமியார் மருமகள் சண்டை.

தான் மருமாளாக இருந்தபோது மாமியார் கொடுத்த தொல்லைகள் மனதிலிருந்து மறையாதது ஒரு காரணமாக தானும் தன் மருமகளைத் தொல்லை செய்வதாக ஒருசிலரின் வாதம்.

கணவன் சம்பாத்தியம் குறைந்து வர பொருளாதாரத்தில் ஓட்டை விழும் என்ற பயம் மாமியார் மருமகள் தகறாரின் ஒரு கோணமாகச் சொல்கிறார்கள். காரணங்கள் வேறானாலும் முடிவு என்னவோ இவர்களிடையே ஓயாத ஒரு சண்டைதான்.

எது எப்படியோ எந்த ஒரு மாமியார் – மருமகள் சண்டையிலும் மகனின் பாடுதான் திண்டாட்டம். ஏன்?

ஒரு பக்கமும் சாய மனதில்லாமல் இரண்டு பக்கமும் சாய வேண்டிய கட்டாயம்.

## தீர்வு:

நமது சமுதாயத்திலே கூட்டுக் குடும்பத்தின் நிழல்கள் முழுவதாக மறையவில்லை. தனி மனித சமுதாயம் தரும் சுதந்திரத்தின் ஈர்ப்பு ஒருபுரம். கூட்டுக் குடும்பத்தின் பாதுகாப்பின் கதகதப்பு மறுபுரம். இரண்டுக்கும் நடுவிலே இந்தக் கால இளைஞர்கள் திண்டாடுகிறார்கள். இந்தக்கால இளம் மனைவிகளுக்கு பொருளாதாரச் சுதந்திரம் அதிகரித்து வர, பேமிலி கோர்ட்டுகளில் விவாகரத்து கேஸ்கள் பலமடங்கு பெருகி விட்டது.

மாறிவரும் சமுதாயத்தில் தனி மனித சுதந்திரம், யாரையும் சார்ந்து இருக்க வேண்டிய அவசியம் இல்லாதிருப்பது, பிழைப்புக்காக ஏழு கடல் கடந்த பயணங்கள் என்ற பல அம்சங்களும், நம்மை விரைவாக தனிமனித சமுதாயம் என்கிற வாழ்க்கை முறையில் வேகமாகக் கொண்டுவிடும்.

அந்த நாள் வரையில் படித்த மருமகளோ மாமியாரோ தன் மகனுடன் சேர்ந்து அமைதியான வாழ்க்கையை நடத்துவது போன்ற ஒரு காட்சி, கனவிலாவது நமக்கு வருமா?சந்தேகம் தான்.

## மத்யவர்க்க மக்களின்

## ஒரு மிகப் பெரிய பலவீனம் இலவசம்.

என்று தொடங்கியதோ தெரியாது, இன்று வியாபாரிகள் மத்தியவர்கத்தின் இந்தப் பலவீனத்தைப் பலவிதங்களில், நன்றாக உபயோகித்து வருகிறார்கள்.

உலகம் முழுவதும், இலவசம் என்ற பெயரில், மத்ய வகுப்பு மக்களை, மொட்டையடிக்கிறார்கள். முக்கியமாக இலவசை இணைப்புகள். ஒரு பொருளை வாங்கினால் வேறு ஓரு பொருள் இலவசம்.

இந்த இலவச இணைப்புகளைப் பெறுவதற்காக, அவசியமே இல்லாத பல பொருள்களை வாங்கும் வழக்கம் நமது மத்ய வர்க்கத்தினர் மட்டுமே.

இரண்டு சட்டை வாங்கினால் ஒன்று இலவசம்

இரண்டு பிஸ்கட் பாக்கெட் விலையில் மூன்று பாக்கெட்.

லாயல்டி அட்டை: அதிக பட்ச விற்பனை (ஞுகீக) விலையை 25 சதமானம் அதிகரித்து அதில் 1 சதமானம் விலை குறைவு செய்யும் பெரும் வியாபார தந்திரத்திற்கு எத்தனை படித்த முட்டாள்கள் அடிமை? பக்கத்தில் இருக்கும் மார்வாடிபலசரக்கு கடையில் அதே பொருளை25 சதமானம் குறைந்த விலையில் பெறலாம்.

## ஓசியில் ஆசை

தொழிலதிபர்களுக்கும் வியாபாரிகளுக்கும் அரசாங்க இயந்திரத்தை தங்களுக்குச் சாதகமாக மாற்றிக் கொள்ள உபயோகமாவது ஓசி.

அரசாங்க ஊழியர்கள், பாங்க் ஊழியர்கள் என்ற மத்திய தர மக்களை வியாபாரிகள் தங்கள் கைக்குள் வைக்கும் தந்திரம் – ஒரு ஓசிக் காலண்டர், ஒரு ஓசி டயரி. வினியோகிப்பது.

சந்தேகமே வேண்டாம். மக்கள் அவ்வளவு மலிவானவர்கள்.

ஒவ்வோரு ஆண்டும், கடைசி மாத இறுதியில், இலவசமாக வினியோகிக்கப்படும் அடுத்த வருட காலண்டர்களைப் பெறுவதற்கு இந்த இந்த அரசு அலுவலரகள் துடிப்பார்கள்.

பல சர்வதேச மற்றும் பிரபலமான பல வெளிநாட்டு மருந்து கம்பெனிகள், அதிகமாக தங்கள் மருந்தை (அவசியம் இல்லாமலேயே) நோயாளிகளுக்கு எழுதும் டாக்டர்களுக்கு டீவீ, பிரிட்ஜ் முதல் கார் வரை இலவசமாக தருவதாகத் திட்டங்கள் பல அமுலில் உண்டு.

தேவை இல்லாத மருந்துகளை, மருத்துவரை நம்பி சாப்பிடும் நோயாளியின் சட்டைப்பையும், தொப்பையும் ஓட்டையாவதின் ரகசியம் புரிகிறதா?

புது வருடம் தொடங்கி சில நாட்களுக்கு வியாபாரிகள், இலவச ங்களை கட்டுகட்டாக அரசாங்க அலுவலகங்கள், பாங்குகள் ஆகியவற்றிக்கு எடுத்து வருவார்கள். அன்று பல்லைக் காட்டியவாறு அலுவலர்கள் அவர்களைச் சுற்றிவர, அரசாங்க வேலைகள் எல்லாமே அன்றையதினங்களில் சுத்தமாக நின்றுவிடும்.

இதைப் பெறும் பலருக்கு டயரி எழுதும் பழக்கம் இல்லாதிருக்கும். அப்படியும் விடமாட்டார்களே! இலவசம் இல்லையா?

ஓசியில் நாட்டமுள்ளவர்களைப்பற்றி ஆந்திராவில் பலகாலமாக வழக்கத்திலிருக்கும் ஒரு பேச்சு:

ப்ரீ என்றால் பினாயிலையும் குடிப்பார்கள்

இலவசத்திற்கு ஏங்குபவர்கள், தங்களை எலிகளாக நினைத்துக் கொள்ளலாம். இலவசமாக கிடைக்கும் மசால் வடையை தின்ன ஆசைப்பட்டுத் தானே எலி பொரியில் சிக்கி இறக்கிறது. அதைப் பார்த்துமா மக்களுக்கு அறிவு வரவில்லை?

## இலவச சிகரெட்

ஹைதராபாதிலுள் ஒரு பிரபல சிகரெட் தயாரிக்கும் நிறுவனம் இருப்பதை பலர் அறிந்திருக்கலாம். அவர்கள் முன்னேறிய விதம் அறிந்திருக்க பலருக்கு சந்தர்ப்பம் கிடைத்திருக்காது.

கீழே காணும் விவரம் சுமார் 30 வருடம் முன்னால் ஒரு பெரியவர்

சொல்லி, நான் கேட்டது – ஆசிரியர்.

இந்த சிகரெட் உற்பத்தி செய்யும் நிருவனம் தொடங்கிய காலத்தில், ஹைதராபாதிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் உள்ள பான் ஷாப் அல்லது வெற்றிலை பாக்கு கடைகளில், இங்கே சிகரெட் இலவசமாக கிடைக்கும் என்று விளம்பரம் செய்ததோடு சில காலம் இலவசமாகவே வினியோகித்தார்கள்.

சில மாதங்கள் கழித்து, இங்கே சார்மினார் சிகரெட் கிடைக்கும் என்ற விளம்பரம் மாற்றப்பட்டது. இந்த இடைப்பட்ட மாதங்களில் ஆயிரக் கணக்கானோர், இலவசமாக கிடைத்த இந்த சிகரெட்டிற்கு அடிமையானார்கள் என்ற விவரத்தை அங்கே பிறந்து வளர்ந்த பெரியவர்கள் தெரிவிப்பார்கள்.

இன்று லட்சக்கணக்கான மக்கள் கான்சரில் அவதிப்பட்டு சாவதற்கு இந்த இலவசம் முக்கிய காரணம்.

## இலவச ஈ–மெயில்

இன்று ஈ–மெயில் இலவசம். இண்டர்நெட் கூட சில வருடங்கள் முன்னால் இலவசமாக இருந்தது. இன்று ஈ–மெயில் பார்க்காமல் பலருக்கு தூக்கம் வராது.

காத்திருங்கள் திடீரென்று ஒரு நாள் ஈ–மெயில் உபயோகிக்க பெரியதாக ஒரு தொகையை மாதா மாதம் தரவேண்டி வரும்.

### இலவசமாக போதை மருந்துகள்

இன்று போதை மருந்து வியாபாரம், நாடு முழுவதும் செழித்து வளர்வதை நான காண்கிறோம். இதன் வளர்ச்சிதின் அடிப்படையும் ஓசி–யில் அடங்கியுள்ளது என்பதை கவனிக்க வேண்டும். மாணவர்களையும் பல சிறுவர்களையும் பிடித்து இலவசமாகவே போதையூட்டும் மருந்துகளை தந்து வளர்ந்த தொழில் போதை மருந்து வியாபாரம்.

ஓசியில் பழகி போதைக்கு அடிமையானதும் ஒன்றிற்கு பத்தாக வசூலித்து விடுவார்கள், நம் வியாபாரிகள்.

## இலவசம் என்பதே ஒரு மாயை

மொத்தத்தில் மக்களுக்கு மனதில் நிற்க வேண்டிய உண்மை என்ன வென்றால், இலவசம் என்பது ஒரு மாயை. யாரும் யாருக்கும்

இலவசமாக எதுவுமே தருவதில்லை.

முக்கியமாக, வியாபாரிகள், நமது முட்டாள்தனத்தை மூலதனமாக வைத்து நடத்தும் வியாபாரத்தில், இலவசம் ஒரு முக்கிய அம்சம்.

அறிவுக் கண்ணை அப்படியே மறைக்கும் இந்த ஓசி என்கிற சமாச்சாரம்.

பங்களூரில் ஒரு அப்பார்மெண்ட் காம்ளெக்ஸ். அதை பராமரிக்க ஒரு தனியார் நிறுவனம்.

ஒவ்வொரு வருடமும் முதியோர் தினத்தை ஒட்டி ஒரு வேளை சாப்பாடு இலவசமாக கொடுக்கும் நிறுவனத்தை ஓகோ என்று போற்றி புகழ்வார்கள் சில முதியவர்கள்.

அந்த நிறுவனம், சில அயோக்கியர்களின் உதவியுன், அவர்களின் பிள்ளைகளில் சட்டையிலிருந்து சில ஆயிரங்களை மாதா மாதம் அனியாயமாக சுரண்டிச் செல்வது இவர்களுக்கு புரியவே புரியாது.

ஏனென்றால் நம் மக்களுக்கு ஒரு ஓசியின் மீதுள்ள பாசம் அறிவுக்க ண்ணை அப்படியே மூடிவிடும்.

நம் நாட்டைப்பற்றிய உலக அபிப்பிராயம்.

இந்த நிகழ்ச்சி, சுமார் 30 ஆண்டுக்கும் முன்னால் நிகழ்ந்தது.

அந்நாள் பிரதமர், அமெரிக்க உளவாளிகள் (சி ஐ ஏ), இந்திய அரசாங்கத்தின் இயந்திரத்தில் ஊடுருவி கேடு விளைவிப்பதாகக் குற்றம் சாட்டியிருந்தார். பதிலுக்கு, அமெரிக்க நாட்டின் இந்திய தூதர் கூறியது கீழ்க்கண்டவாறு:

‘சி ஐ ஏ ஏஜெண்டுகளை உபயோகிப்பது அதிக செலவாகும். அதைவிட முக்கியமாக உங்கள் நாட்டிற்கு இஐஅ தேவை இல்லை. பதிலாக, ஒரே ஒரு விஸ்கி புட்டி ஒன்றை, அரசாங்க அலவலகம் முன்னால் காண்பித்து, அதை அப்படியே எங்கள் அலுவலகம் வரை கொண்டு வந்தால், உங்கள் உயர் அதிகாரிகள், எல்லா பைல் களையும் தூக்கிக்கொண்டு பின்னாலேயே ஓடிவருவார்கள் என்று குறிப்பிட்டார்.

பத்திரிக்கைகளில் வந்த இந்த செய்தியை வெளியிட, அதை யாரும் எதிர்க்கவோ அல்லது மறுக்கவோ இல்லை என்பது குறிப்பிடத்தகுந்தது.

இன்று மாத்திரம் இல்லை 2000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, 30 வெள்ளிக்காசுக்கு ஆசைப்பட்டு, இயேசுபிரானை, ரோமானிய காவலாளிகளுக்கு, அவருடைய 12 சீடர்களில் ஒருவரான ஜூதாஸ் (ஒதஸ்ரீச்ண்) காட்டிக்கொடுத்ததும், இதன் பின் விளைவாகவே, இயேசு சிலுவையில் அறையப்பட்டார் என்பது வரலாறு.

ஓசிக்கு ஆசைப்படுவது ஒரு மன நோய்.

ஏழைகள் இலவசமாக பெறுவது தவறில்லை. விவசாயி மற்றும் சமுதாயத்தில் பலருக்கு, அவர்களின் உழைப்பிற்கு தகுந்த ஊதியம் தரப்படுவதில்லை. அவர்களுக்கு கிடைக்கும் குறைந்த வருமானத்தில் அடிப்படைத் தேவைகளே என்றும் பூர்த்தியாவதில்லை! இவர்கள் மாத்திரமே இலவசமாக எதையும் பெறத் தகுதி பெற்றவர்கள்.

அதே சமயம், மத்தியதர மக்களும் பணக்காரர்கள் ஓசிக்கு எதையும் பெறுவதற்கு விரும்பினால், அது பேராசை. இவர்களுக்கு எத்தனை செல்வமிருந்தும் பொருள் சேர்க்கும் ஆசை மட்டும் குறைவதில்லை. இந்த வகை மக்கள் மனதளவில் பரம–ஏழைகளே!

குடிசைவாசிகளுக்கு கிடைக்க வேண்டிய வீட்டு மனைப் பட்டாக்களை, நமது நாட்டின் பல மானிலங்களின் அரசியல்வாதிகள் அவர்களின் சொந்த பந்தங்கள் மற்றும் பிரபலங்கள், விழுங்கிய வினோதம் தான் என்ன!

ஏழைகளுக்குச் சேரவேண்டிய உழு நிலங்களை இலவச மாக பெற்றவர்கள் எத்தனை பேர்? அரசியல்வாதி மற்றும் அதிகாரிகளின் உதவியுடன் அரசாங்க நிலத்தை அடிமாட்டு விலைக்கும், இலவசமாகவும் பெற்ற, இந்த வகைப் பிரலங்கள் பலரை நமக்கு தெரியும்

ஆனால், நடுத்தர மக்கள் ஓசிக்கு ஆசைப்படுவதோ, ஒரு வியாதி. இவர்களுக்கு தேவையான அனைத்தையும் பெற வழிகள் உண்டு. அதே சமயம் செல்வந்தராகவளரவும் பலருக்கு பயமும் உண்டு.

இலவசமாக கொடுத்தால், தனக்கு தீனி கொடுக்க வழி இருக்கிறதா என்று சிறிதும் சிந்திக்காமல், யானையையும் வாங்கிக் கொள்ளும் மக்கள் இவர்கள்.

ஏழைகளின் ஓசி ஆசையோ, மற்றவர்கள் ஆசைப்போல தனக்கும் நாட்டிற்கும் ஆபத்தானது இல்லை.

இந்த நடுத்தர மக்களின் ஓசி ஆசையோ, ஒரு நாட்டை, அதன் மக்களை வளர்ந்த நாடுகளுக்கும், உலக நாடுகளின் மோசமான வியாபாரிகளுக்கும் நாட்டையே அடிமையாக்குகிறது.

தப்பிய தாளங்கள்

# கதை 20.
# கேசவனும் நண்பர்களும்



கேசவன் 8ம் வகுப்பில் படிக்கும்போதே பலருக்கு அவன் ஒரு ஹீரோ. அவன் நடுத்தர வகுப்பை சேர்ந்தபோதிலும் அவன் உடையும், நடந்து கொள்ளும் விதமும் பணக்காரனாகவே காட்டும்.

அவ்வப்போது, தன்னை சுற்றிவந்து துதிபாடும் கூட்டத்திற்கு இவன் தாராளமாக செலவு செய்வான். புதியதாக ரிலீசான தன் அபிமான நடிகர் சினிமாவுக்கு முதல் நாள் முதல் ஷோ தவறாமல் அழைத்துச் செல்வான். அவனுக்கு ஜால்ரா போடாத சிலர் உண்டு. அவர்களை கேசவனுக்கு பிடிக்காது.

அப்போதே கேசவனுக்கு ஒரு கேர்ல் பிரண்ட உண்டு. சிலருக்கு அவன் மேல் பொறாமை கொள்ள இது ஒரு முக்கிய காரணம். எது எப்படியோ, விளையாட்டுப்போட்டிகளில் பரிசு வாங்குவதுண்டு. ஆனால் பள்ளியில் நடத்தும் விளையாட்டுப் போட்டிகளே எல்லை. படிப்பில் அவ்வளவு போதாது.

நாகராஜன், அதே கிளாசில் படித்த ஒரு மாணவன். நாகராஜனுக்கும் அஜனைப் போன்ற சக மாணவர்களுக்கு கேசவன் அன்புடன் அளித்த பட்டப்பெயர், சோடாபுட்டி நாகு, மற்ற புத்தகப்புழு. தயிர்ச ாதங்கள். நாகராஜன்கள் அவர்களின் அன்றாட அடிபப்டைத் தேவை

களை ஒரு மாதிரி சமாளித்து, எப்படியாவது நடுத்தரமக்களாக மாற முயற்சி செய்யும் பல குடும்பங்களில் ஒன்றைச் சேர்ந்தவன்.

10 கிளாஸ் வரைதான் அந்த பள்ளியில் உண்டு. அதன் பிறகு, நாகுவும், கேசவனும் பல வருடங்கள் சந்திக்கவில்லை.

வெளிமானிலங்களில் வேலை செய்து வந்த நாகு வருடம் ஒரு முறை விடுமுறைக்கும், மற்றபடி திருமணம் முக்கியமான குடும்ப சுபகாரியாங்கள் என்று சொந்த ஊர் சேர்வதுண்டு.

இப்போது ஒரு எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி. நாகராஜன் வீட்டிற்கு அவன் தந்தையின் நண்பர் வந்தார். அவர் பின்னால், தன் வயதே மதிக்கத்தக்க ஒரு இளைஞன். கேசவன். பள்ளியில் படிக்கும்போது பார்த்ததைவிட மெலிந்தும் பரிதாபமாகவும் காணப் பட்டான். நாகு, கேசவன் இருவருமே ஒருவரை ஒருவர் எதிர்பார்க்காத ஒரு சந்திப்பு. தங்கள் அப்பாக்கள் ஒருவருக்கு ஒருவர் ஏதோ ஒரு வித்தத்தில் தொடர்புள்ளவர்கள் என்று இருவருக்குமே தெரியாது.

தன் நண்பரின் மகன் வெளிமாநிலத்தில் நல்ல வேலையில் இருப்பதாகவும், அவன் மூலம் ஏதாவது வேலைவாய்ப்பு தேடித்தர முடியுமா என்று கேட்கலாம் என்று சொல்ல, கேசவன் தன் தநதை பின்னால் வந்தான்.

இருவரும், தனியாகச் சென்று பழைய காலத்தை புரட்டிப் பார்த்தார்கள்.

கேசவன் சொன்னான். நாகு, உன்னையும், உன்னைப் போல படிப்பில் கவனம் செலுத்தி நன்றாக படித்த மாணவர்களை, நானும், என்னைப் போன்ற பலரும் கேலி செய்ததுண்டு.

புத்தகப் புழுக்கள், வாழ்கையை அனுபவிக்க தெரியாக அப்பாவிகள் என்றெல்லாம் சொல்லியதுண்டு.

படிக்கும் காலத்தில் சினிமா பார்ப்பது, பெண்கள் பின்னால் சுற்றுவது என்பதுதான் ஆண்பிள்ளைகளின் இலகக்கணம் என்று நினைத்தோம்.

படிக்கும்போது காதலிப்பது என்பதே, ஒரு பெரிய புரட்சி என்று நினைத்தோம். பெற்றோரின் தியாகங்களின் வலியை உணராமல், அவர்களுக்கு உழைத்துக் கிடைத்த பணத்தை என்னைப்

போன்றவர்கள் தாறுமாறாகவும் ஊதாரித்தனமாகவும் செலவு செய்தோம். அப்பாவின் கண்டிப்பு அம்மாவின் கண்ணீர் எங்களை மாயையிலிருந்து விலக உதவவில்லை.

தங்களைவிட, தங்கள் பிள்ளைகள் வாழ்வில் நல்ல நிலைக்கு உயரவேண்டும் என்று எல்லா பெற்றோர்களையும் போல எங்கள் பெற்றோரும் கனவு கண்டார்கள். அந்த பெற்றோரை, எங்களைப் போன்றவர்கள், கண்ணீர் சிந்த வைத்தோம்.

இப்போது, உன்னைப்போல பிள்ளைகள், படிக்கும் காலத்தில் நன்றாக படித்து, சினிமா மற்றும் கேளிக்கைகளில் மனம் சிதறவிடாமல், இன்று ஒரு நல்ல வேலையில் இருக்கிறீர்கள். என்னைப் போலவே பெரும்பாலான பிள்ளைகள் மாயையின் மயக்ணீத்தில் மூழ்கி, வாழ்கையை இனிய இசையாக இல்லாமல், கேட்கவே சகிக்காத, தாளம் தப்பிய ஒரு இசையாக முடிகிறது.

கல்வியில் தேர்ந்து, வேலையில் சேர்ந்து, நிதானமாக,பெரியவர்கள் உதவியுடன், மனதிற்கு பிடித்த நல்ல குடும்பத்திலிருந்து மனைவியைத் தேர்ந்தெடுத்து, மகிழ்ச்சியாக வாழ்கிறீர்கள்.

எங்களைப் போன்றவர்கள் கண் திறக்கும்போது காலங்கள் எங்களைத் தாண்டி சென்றுவிடுகின்றன.

மேலும் தொடர்ந்த கேசவன், எனக்கு பிள்ளை குட்டி என்று குடும்பம் பெருத்துவிட்டது. உள்ளூரில் சிறிய வேலைகளில் வருமானம் போதுமானதாக இல்லை எனவே உன் உதவியைத்தேடி வந்திருக்கிறோம் என்று முடித்தான்

இந்த கதையை சிலருக்கு சொல்ல, அவர்களின் கேள்விகள் விசித்திரமாக இருந்தது,

ஒரு நண்பர் கேட்டார். கேசவனுக்கு நாகராஜனால் வேலை கிடை த்ததா?

வேறொருவர்– நாகராஜன், பள்ளிக்காலத்தில் கேலி செய்த கேசவனுக்கு உதவக்கூடாது என்று எங்கெங்கோ தன் மனதை ஓடவிட்டார்.

பள்ளிச் சிறுவர் – சிறுமியர், பட்டென்று சொன்னார்கள். பள்ளிக்காலத்தை தவறாக செலவிட்டதாக.

## தப்பிய தாளங்கள்

### மாறிவரும் பருவங்களும், மாறாத மனிதர்களும்

### தாளம் தப்பிய இசை

பாரதியாரும், பல முன்னோர்களும், மனிதனின் வாழ்நாளை பருவங்களாக பிரித்தார்கள். அந்தந்த பருவங்களுக்கு உரிய செயல்களை மாத்திரமே செய்து, வாழ்ந்துவன்தால், வாழ்க்கை நல்லதொரு இசையாக இருக்கும். பருவம் தவறிய செயல்கள், தாளம் தப்பிய இசையாக, வாழ்கையை துன்பமயமாக்கும்.

குழந்தப்பருவம். இந்த காலகட்டத்தில், பிறந்த குழந்தை தொட்டிலிருந்து நேரடியாக பாலர் பள்ளிக்கு மாற்றப்படுகிறது. பாரதியார் சொன்னபடி ஓடி விளையாட இடமோ, சூழ்நிலையோ இல்லை.

மாணவப் பருவம்: யாரைக் குறை சொல்லுவது? மாணவர்கள், அவ்வையார் சொன்னதை – இளமையில் கல் – என்பதைக் கடைபிடிப்பதில்லை. அவ்வையாருக்குத் தெரிந்தது பலர் செ ால்லியும் நமக்குப் புரிய வில்லையே! இளமை கடந்துவிட்டால் கல்வி நம் அருகே வர பயப்படும் என்பதை மறக்கிறார்கள். ஏதேனும் ஒரு தொழிலில் பயிற்ச்சி பெறவேண்டியது நன்மை தரும். ஆனால், இந்த முயற்சியை முறியடிக்க யார் யாரோ காரணமாகிறர்கள்.

அடுத்த பருவத்தில், ஒரு பெண்ணை (ஆணை)க் கை பிடித்து வாழ்கையின் நியதியை – சந்ததிகளை உருவாக்குவதும், அதன் பின், சந்ததியை முன்னேற்றுவதும் நடந்தேற, பொருள் வேண்டுமே, தயார் செய்ய வேண்டாமா? அவசரப்பட்டால் எப்படி?

நமது கதைகளில், கேசவன் மாணவப் பருவத்தில் கல்வியைப் புறக்கணித்து இல்(லாத) வாழ்கையில் ஈடுபட்டதால் அடைந்த துயரமான வாழ்வின் கதையை படித்தோம்.

அடுத்து குடும்பப் பருவம்: மாணவப்பருவத்தில், அனேக சிறுவர்கள் அவசரப்பட்டு குடும்பப்பருவ செயலிகளில் ஈடுபட தானும் தவித்து, பெற்றவர்களையும் தவிக்கவைப்பது, ஒரு தாளம்

தப்பிய இசை.

அடுத்தது, கடைசி அதோடு முக்கியமான பருவம் – துறவரம். இந்த பருவத்தில், அடுத்த தலை முறையின் வாழ்வில் தலையிடுவது தவறாது. பிள்ளை குட்டிக்கு வாழ வழி செய்தோமோ மூட்டை கட்டினோமா என்று இருக்க் வேண்டும்.

இப்படி செய்யாமல் இளசுகளின் வாழ்வில் தலையிட்டு, தனது அமைதியையும் இழந்து, மொத்த குடும்ப அமைதியையும் குலைப்பது அனேகம் மக்கள் தவறாமல் செய்கிறார்கள். இவர்கள் தன் செயலையும் அதன் விளைவையும் என்றுமே உணர்வதில்லை.

ரிடையரான பிறகு அலுவலகதிற்கோ அல்லது மற்ற பணிபுரிந்த இடத்தை அடைந்து, தற்போது பணியிலுள்ளவர்களைக் குற்றம் சொல்லி கலாட்டா செய்வதற்கும் வீட்டில் இளைய தலைமுறையுடன் தகராறு செய்வதற்கும் வேறுபாடுண்டா?

இப்போது உங்களுக்கு தெரியுமே, துறவர பருவத்தில், குடும்பத்தில் குழப்பம் வரவழைப்பதும் ஒரு தாளம் தப்பிய இசை தானென்று !

பொதுவாக எல்லோருக்குமே ஒரு செய்தி

இப்போது நான் சொல்லப் போவது ஏழை பணக்காரர், மத்திய வகுப்பு மக்கள் என்றில்லாமல், எல்லோருக்குமே பொதுவானது.

ஏன், ஏன், ஏன்?

நம்மை துயரங்கள் தொடர்வது எதனால்? மக்களில் பலர் பலவிதமான அவதிகளுககு உள்ளாவது எதனால்? பெரும்பான்மை மக்களை ஏழ்மை விடாமல் பிடித்திருப்பது எதனால்? வியாதிகளால், யுத்தங்களால், இயற்கையின் சீற்றத்தால் விடாது நாம் அவதியுறுவது எதனால் ? மக்களில் சிலர், தீய சக்திகளாக உருவாவதேன்? சமுதாயத்தில் செல்வந்தர்கள் பலர் நம் நாட்டு மக்களை சுரண்டி, வெளிநாட்டு வங்கிகளில் சேர்ப்பது ஏன்?

கொஞ்சம் சிந்தனையை ஓடவிடுவோமா?

மேலே கண்ட கணக்கில்லாத ஏன் களுக்கு பதில், ஒரே ஒரு பதில்,, அறிவின் குறைவுதான். இதை நம்ப கஷ்டமாக இருக்கிறதா?

கீழே வருவதை படித்துத்தான் பாருங்களேன்.

மக்களை ஒவ்வொருவரும் தனித்தன்மை பெற்றிருந்தாலும், பொதுவாக, அவர்கள் அடையும் அறிவைப் பொருத்து, மக்களை மூன்று வகையாக பிரிக்கலாம்.

இந்த மூன்றுவகை மக்களைப் பற்றிய விளக்கம் மிடில் கிளாஸ் மட்டுமல்ல, எல்லா மக்களுக்கும் பொருந்தும்.

மூன்று வகை மக்கள்

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த சீன அறிஞர்கள் கூறியது கீழே தரப்பட்டுள்ளது. இதுவே, நமது இந்த விவாதத் திற்கு ஆதாரம். இதன் அடிப்படையில் மக்களை மூன்று விதமாக பிரித்து ஆராயலாம்..

நலமாக வாழ மனிதனுக்கு அறிவு மிக அவசியம் அதை அடைய இரண்டு, அடுத்தடுத்த படிகள் உண்டு. முதலாவது கற்பது. அடுத்து அதை சிந்திப்பது. படிப்படியாக முன்னேறினால், முன்னேற்றம்.

மனிதனுக்கு ஆறு அறிவையும், மிருகங்களுக்கு ஒன்று குறைவாக இருப்பதாக பலர் சொல்லி நாம் நம்புகிறோம். (நமது நல்ல காலம், இந்தச் செய்தி மிருகங்களுக்குத் தெரியாது).

கீழே தொடரும் விவாதத்திற்குப் பிறகு, மக்களில் பலர் மிருகங்களைவிட எந்த விதத்திலும் உயர்ந்தவரில்லை என்ற முடிவுக்கு மட்டுமே வருவோம்.

## சீன ஞானிகள் சொன்னது

கற்றவன் சிந்திக்காவிட்டால், கற்றதன் பயன் இல்லாமல் போகும்.(கற்பதற்கு செலவிட்ட நேரம், பொருள் எல்லாம் வீணே).

ஆனால் கல்லாதவன் சிந்தித்தால், அவனுக்கும், அவனை அடுத்திருப்பவர்களுக்கும் ஆபத்து.

கீழே தொடரும் விளக்கத்தில் காணப்படும் முதல் வகை மக்கள், அறிவிலும் சிந்தனையிலும் சிறந்தவர்களாகவும் பட்டங்கள் பல பெற்று பெரிய பதவியில் உள்ளவராக இருப்பார்களோ?

நிச்சயமாக இல்லை.

கல்விக் கூடங்களில் கற்பது மாத்திரமே கற்பது ஆகாது. முறையான கல்வி, பல மொழிகளை அறிந்திருப்பது, உயர் பதவிகள் வகிப்பது ஆகியவை ஒருவர் கற்பதற்கான் பல்வேறு வாய்ப்பை அள்ளித் தரும். அவ்வளவுதான். அதுவும் தேவையான எல்லா அறிவையும் தராது.

பத்திரிக்கைகள், தொலைக்காட்சி, வாழ்வில் வெற்றி பெற்றவர்களின் சொற்பொழிவுகள், பழமொழிகள், பல மொழிகளில், ஞானிகளின் அறிவுரைகளை.தாங்கி நிற்கும் புத்தகங்கள், தனது வாழ்க்கை அனுபவங்கள், பிறரின் அனுபவங்கள். ஆகிய எல்லாமே கற்கும் அல்லது தேவையான அறிவை அடைய சில வழிகள். இது ஒரு பாகம்தான். சிந்தனை, அறிவை முழுமையாக்குகிறது.

கற்கும் இந்த அனுவங்களை வாழ்வோடு இணைத்து செயல்படுவதுதான், சிந்தனை செய்யும் வேலை.

நமக்கு சிந்தனையில் குறைவு வந்தால், அறிந்ததனால் கிடைக்க வேண்டிய பலன் கிடைக்காமல் போகிறது.

முதல் வகை மக்கள்: அறிவைத் தேடிச் சென்று, பெற்று எச்ச ரிக்கையாகி, வாழ்க்கையில் வெற்றியும் கண்டு, துயரத்தை குறைப்பார்கள். எப்படி? தனது அனுபவத்தோடு நில்லாமல், செய்திகள், சரித்திரம், கதைகள், அறிவு தரும் புத்தகங்கள், சான்றோர் பேச்சுகள், ஞானிகளின் உபதேசங்கள், மற்றவர்கள் பெற்ற அனுபவம் (நல்லது கெட்டது இரண்டுமே) மூலமாகவும் அறிவைத் தேடுவார்கள்.

இவர்களின் வாழ்வில் பற்பல வழிகளில் கற்பதும், கற்றதை சிந்திப்பதும் ஒரு சிறப்பான அம்சம். இவர்கள் வாழ்வில் இவர்கள் முக்கியமாக நம்புவது தான் அடைந்த அறிவை மாத்திரமே!

பிறரின் அறிவை முழுவதுமாக சார்ந்தோ அல்லது ஏதாவது ஒரு நம்பிக்கையின் அடிப்படையிலுமோ வாழ்வதில்லை.

இரண்டாம் வகை மக்கள் :. தானே (அவதிப்) பட்டால்தான் இவர்கள் அறிவில் சேரும். பிறர் தன் அனுபவத்தை எவ்வளவு

விளக்கமாகச் சொன்னாலும், பல முறை தானே நேரடியாகக் கண்டாலும், பிறர் அனுபவங்களைப் பலர் சொல்லக் கேட்டாலும் – எதுவுமே இவர்கள் அறிவில் எளிதாக சேராது.

இவர்கள் கற்பதிலும், கற்றதை சிந்திப்பதிலும், முதல் வகை மக்க ளைவிட அதிக அளவில் குறைவு உள்ளவர்கள்.

எந்த அளவு குறைவு உள்ளது என்பது வாழ்க்கையில், இவர்கள் அடையும் ஏமாற்றங்களில், பெறும் தோல்விகளில், பிறருக்கு அடிமையாக வாழ்வதில், அடுத்தவரை நம்பி மோசம் போவதில் தெரியவரும்.

இவர்களே, அதிக வட்டி தருவதாக விளம்பரம் செய்யும் பிளேடு கம்பெனிகளில் சேமிப்பார்கள். வியாபாரிகள் தங்கள் கொள்ளை லாபத்திற்கு முழுவதும் நம்பியிருப்பது இவர்களைத்தான். விடாமல், விதவிதமாக ஏமாறும் மக்கள் இந்த வகையினரே!

ஓரளவு கடினமான உழைப்பு, துணிச்சலுடன் போராடுவது என்பது இவர்களின் பலமானால், பேராசையுடன் கூடிய அறிவு குறைவு, இவர்களின் மிகப் பெரிய பலவீனம்.

இவர்களின் செயல்படுவது ஓரளவு நம்பிக்கையிலும், மீதம் தன் சொந்த அறிவிலும் – இரண்டுமே கலந்துதான்.

நம்பிக்கை என்றால்? மனிதனின் நம்பிக்கைகளை ஒரு சிறிய பட்டியலிலே அடக்கி விடமுடியாது. உதாரணத்திற்கு தேவையான ஒரு, சில நம்பிக்கைகளை மட்டுமே பட்டியலிடுவோம் –

பிற மனிதர்களின் அறிவில், போலிச் சாமியார்களில், விளம்பரங்களில் காணும் செய்திகளில், அதிருஷ்டத்தில், பல வித கடவுள்களில், சோதிடம், வாஸ்து, அதிருஷ்டக் கற்கள்.

இரண்டாவது வகை மக்கள் படும் அவதிகள், கீழே விளக்கிய மூன்றாவது வகை மக்களைவிட, ஒருவிதத்தில், சிறிதளவு பரவாயில்லை.

மூன்றாவது வகையினர். எண்ணிக்கையில் மிகவும் மற்ற இரண்டு வகை மக்க்ளைவிட பல மடங்கு அதிகமானவர்கள். இவர்களுடைய மிகப் பெரிய பலவீனம், தனக்கு நல்லது எது, கெட்டது என்று தெரியாது.

தனது வாழ்கையில் அனுபவத்திலிருந்துகூட சிறிது அறிவும் வளராது. பிறர் எடுத்து சொன்னால் புரியாது,

தானாக கண்டாலும், கேட்டாலும் அது அனுபவமாக மாறாது.

இவர்கள் (தங்கள் சூழ்நிலையை உணர்வதில்லை) அதாவது கற்பதில்லை. அதனுடன் கூடிய சிந்தனைகளும் இல்லாதவர்கள். இவர்கள் செய்யும் சிந்தனை தான் நம்பிய சிலரின் அறிவில். அதனால் அவர்கள் அடையும் துயரமும், அவரை அடுத்தவர் அடையும் துயரமும் கணக்கில்லாதது.

இவர்கள் சிந்திக்காமல் இருப்பது இவர்களுக்கும் இவர்களை சுற்றி உள்ளவர்களுக்கும் மிகவு நல்லது.

இவர்கள் நலமாக வாழத் தேவையான அறிவு இவர்களுக்கு என்றுமே கிடைத்ததில்லை.

இவர்கள் வாழ்வில் செயல்பாட்டிற்குத் தேடுவது. நம்பகமான மனிதர்கள், தலைவர்கள் மற்றும் கடவுள்.

இவர்கள் பலமே, இவர்கள் பலவீனத்தில்தான். தன் வாழ்க்கை இப்படித்தான் என்ற முடிவோடு, துயரை துணையாகக் கொண்டு வாழ்ந்து மடிவார்கள். இவர்களுக்கும், நாலுகால் உயிரினங்களுக்கும் அதிக வேறுபாடு காண முடியாது

# முடிவுரை:

நமது வாழ்க்கையில் தவறாமல் செய்வது ஒன்று உண்டென்றால் அதுதான் தவறு.

பெரும்பாலான நேரங்களில், நாம் தவறு செய்ய வேண்டுமென்றே தவறு செய்யவில்லை. இதுதான் சரி என்று மனதிற்கு பட்டது அதைச் செய்யும்போது அது தவறு என்று தெரிவதில்லை. அவ்வளவுதான்.

சில தவறுகளைத் தெரிந்தே செய்கிறோம். இது தவறு என்று தெரியும், ஆனால் லாபம் கிடைக்கும். உழைக்காமல் வசதியாக வாழலாம். கிட்டிய கணிப்பில் மாட்டிகொண்டு அவதிப்படும் வாய்ப்புகள் அதிகமாக இல்லை. இந்த காரணங்களினால் தவறு செய்கிறோம்.

இந்த தவறைச் செய்தால் கம்பி எண்ண வாய்ப்புகளும் உண்டு என்று தெரியும். ஆனால் நமக்குத் தெரிந்த பலர் இதே தப்பைச் செய்தும் மாட்டிக்கொள்ளவில்லை. கொஞ்சம் ரிஸ்க் எடுத்துப் பார்க்கலாமே என்று தவறு செய்வோர் பலர் உண்டு.

திருவள்ளுவர், ஔவையார், நாலடியார் எல்லாருமே சுத்தமாக எழுதி வைத்துவிட்டு சென்றிருக்கிறார்கள். அதிலிருந்து கற்று மனதில் இருத்தி அமைதியான இதமான மகிழ்ச்சியான வாழ்க்கை நடத்துவது சுலபம்தான்.

மாறாக, இவ்வளவு நாள் துயரத்துடன் வாழ்ந்துவிட்டு திடீரென்று அமைதியான வாழ்க்கை மேற்க்கொண்டால் சுவையாக இருக்காது என்ற எண்ணம் இருந்தால் தவறுகளை விடாது தொடருங்கள். பிரம்மனுக்கு பிரியமானவராக வாழலாம்.

நட்புடன்,

நடராஜன் நாகரெத்தினம்.

http://science-of-good-living.blogspot.com/
http://shake-hands-with-bramma.blogspot.com/